# நித்திலக் கோவை



(கட்டுரைத் தொகுப்பு)




புலவர் பு. செல்வராசன்
(தலைமைத் தமிழாசிரியர்)
C. A. H. இந்துமுஸ்லிம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை.

விவேகானந்தா பதிப்பகம்
விஜயபுரம், திருவாரூர்.

...பெற்றது] 1955 [விலை அணா 14

# நித்திலக் கோவை

(கட்டுரைத் தொகுப்பு)

Approved by The T. B. C. Madras
Vide Fort. ST., George Gazette Part I- B. Page 28
Dated 4th May 1955.


புலவர் பு. செல்வராசன்

(தலைமைத் தமிழாசிரியர்)

C. A. H. இந்துமுஸ்லிம் உயர்நிலைப்பள்ளி, சென்னை.






விவேகானந்தா பதிப்பகம்

விஜயபுரம் : திருவாரூர்.

உரிமை பெற்றது]  1955  [விலை அணு 14

# முன்னுரை

**நித்திலக் கோவை** எனும் பெயர் பூண்ட இச்சிறு நூல், நம் தமிழ்நாட்டு மாணவ மாணவியர்க்குத் துணை நூலாகப் பயன்படும் கருத்துக் கொண்டு எழுதப்பட்டுள்ள கட்டுரைக் கோவையாகும்.

மாணவ மாணவியர், பல செய்திகளை அறிந்து, அறிவை விரிவாக்கிக் கொள்ளுதல் வேண்டும் எனும் நோக்குடனும், ஆராய்ச்சிக் கட்டுரை, புனைந்துரை கட்டுரை, விளக்கக் கட்டுரை, சிறுகதை, நாடகம் முதலியவற்றை முறையறிந்து எழுதும் ஆற்றல் பெறுதல் வேண்டும் எனும் கருத்துடனும் ஏழு கட்டுரைகள் இந்நூலின்கண் இடம் பெறச் செய்யப் பட்டுள்ளன.

இதனை, மாணவ மாணவியர் படித்து நற்பயன் அடையச் செய்யுமாறு அறிஞர் பெருமக்களை வேண்டு கின்றேன்.

சென்னை,
31—9—1954.

**பு. செல்வராசன்**

# உள்ளுறை

---

# 1. ஆங்கிலத்தைப் பார்

"பொய்யகல நாளும் புகழ்விளைத்தல் என்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி."

எனும் செய்யுள், பாண்டியர் குடியின் தொன்மையை விளக்குகின்றது. 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' என முடிவேந்தர் மூவர்க்கும் பொது உரிமையுடையதாய்த் தமிழகம் விளங்கியதெனினும், பாண்டிய மன்னரே தொன்மை வாய்ந்தவராய்த் தமிழ்க் கழகம் நிறுவியவராய்ச் செந்தமிழ் நாட்டுக் குரியவராய் விளங்கினர் என்பது தேற்றம்.

எனவே, தமிழ் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தது. தொன்மையுடைத்து என்னும் உண்மையை மகிழ்ச்சியுடன் கூறுகிறோம்; தமிழ் என்றால் இன்பம் என்று பொருள் கூறுகிறோம்; இயல், இசை, நாடகம் என வகைப் படுத்திக் கூறி, இவ்வண்ணம் உலக மொழிகளுள் வேறு எதுவும் வகைப்படுத்தப்படவில்லை யாதலின், தமிழன் தன் மொழி அமைப்பில் மிகச் சிறப்புடையவன் என மகிழ்ச்சிப் பெருக் கடைகிறோம். நம்மை ஈன்ற தாயிடம் பேரன்பு கொண்டிருப்பதுபோல, நம் தாய் மொழியாகிய தமிழினிடத்தும் பேரன்பு பூண்டிருக்கின்றோம்.

எனவே, நம் இன்பத் தமிழைக் கல்லூரிகளிலும், போதனை மொழியாகச் செய்யவேண்டுமென்றும், அரசாங்க மொழியாகச் செய்யவேண்டுமென்றும் விரும்புகின்றோம்; வற்புறுத்துகின்றோம்.

ஆனால், இன்றைய தமிழ் மொழியின் நிலை யாது? இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழிலும் இன்றுள்ள நூல்கள் யாவை? தமிழ் நாடக நூல்கள் எத்தனை இருக்கின்றன? இலக்கியத் துறையில் சங்க காலத்திற்குப் பின் நாம் அடைந்த முன்னேற்றம் யாது? "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே" என்று நன்னூலார் கூறியதை நன்கு பயன்படுத்திப் பேசுகின்றோம், எழுதுகின்றோம். ஆனால் பழையன எனப்படுவதில் நாம் எவற்றைக் கைவிட்டிருக்கிறோம்? புதியன எவற்றை மேற்கொண்டுள்ளோம்? பிற மொழியாளர் இந்த இலக்கண விதியைத் தலைமேல் தாங்கிக் காலத்திற்கேற்ற மாறுதல்களை ஏற்றுப்புதிய இலக்கியங்கள் பலவற்றை இயற்றியுள்ளனரே! நாம் மாட்டும் அவ்வாறுமுற்போக் கடையாமல் வாய்ச்சொல் வீரராய்த் திகழ்ந்து வருகின்றோமே, சற்றேனும் சிந்திக்கின்றோமா இந்நிலையை!

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த சங்க இலக்கியங்களின் சிறப்பைக் குறித்து நாம் பெருமை கொள்ளுகின்றோம். அவற்றைப் பற்றிப் பேசுகின்றோம். அச்சங்க காலச் செய்யுள்களுக்குப் பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விரிவுரை, விருத்தியுரை, அகல உரை, தெளிவுரை, புத்துரை என்றெல்லாம் உரை எழுதுகின்றோம். அச்செய்யுட் கருத்துக்களை உரைநடைப் படுத்துகின்றோம்; பிற்

காலத்து நூல்களான ஐம்பெரும் 'காப்பியங்கள், இராமாயணம், பெரிய புராணம் போன்றவற்றையும் அதே போல் சிறப்பிக்கின்றோம். திருக்குறள், நாலடியார், திருவாசகம் போன்ற நூல்கள் உலகத்து மொழிகள் பலவற்றில் பெயர்க்கப்பட்டுள்ளன எனப் பெருமை கொள்கிறோம், உலகத்துக்குப் பொதுவாயுள்ள தசம (பதின் கூற்று) எண்மானம் (Decimal System) தமிழகத்தினின்றே உலகிற்குப் பரவியது என்பதில் பெருமையடைகிறோம். கீழ்வாய் இலக்கம் இன்றளவும் தமிழரின் கணிதப் புலமையை விளக்கவல்லதாயுள தென்பதையும், இசையில் இன்றளவும் பண்களும், பாலை போன்ற அவற்றின் பிரிவுகளும், வட்டணைப் பாகுபாடும் தமிழகத்துக்கே சிறப்பாயுள வென்பதையும், மருத்துவத்தில் நாடியறியும் திட்டம், புடமுறை, நீற்றுமுறை, சுண்ணமுறை முதலியவை தமிழ்ச் சித்தர்களுக்கே உரியவை என்பதையும் கூறிப் பெருமையடைகிறோம். ஆனால், இவை பற்றிய நூல்கள் யாவும் ஒரு கணத்தில் விரல்விட்டு எண்ணிவிடக்கூடியவைகளே அன்றோ! இலக்கியம் தவிரப் பிற துறைகளில் தமிழில் நூல்கள் பிற்காலத்தில் எத்தனை வெளிப்பட்டுள்ளன ?

தமிழுக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர்த் தோன்றிய ஆங்கிலத்தைப் பாருங்கள்! அந்த மொழியில் உள்ள நூல்களை எண்ணிப் பார்க்கத்தான் முடிகிறதா? இலக்கியம் எனில் இயல், இசை, நாடகம் ஆகிய முத்துறைகளிலும் எண்ணிறந்த நூல்கள் வெளிவந்து உலக மக்களுக்குத் தெவிட்டாத இலக்கிய விருந்தூட்டுகின்றன. இவை தவிர, அரசியல், விஞ்ஞானம், பொருளாதாரம், இரசாயனம், உயர்கணிதம், உழவு,

தாவர உற்பத்தி, வரலாறு, நில் ஆராய்ச்சி, மனித உடற்கூறு, உளப்பண்பு, இயற்கை, சமய ஆராய்ச்சி என எத்தனையோ துறைகளில் எவ்வளவோ நூல்கள் வெளிவந்துள்ளன. ஆங்கிலத்தில் வெளிவராத கலை நூல் இதுவென ஒன்றையேனும் எடுத்துக்கூற முடியாத வாறு உலகிலுள்ள எல்லா மொழிக் கலைகளும் வெளிவந்துள்ளன.

நம் பண்டைய மொழியாகிய தமிழை இந்நாளைய ஆங்கிலத்துடன் ஒப்பிட்டுப் பாருங்கள்! தமிழ் மொழி உரமும் நீருமற்ற வளமில்லாத வரண்ட பாலை நிலத்தில் வளரும் இலைகளற்ற வெறும் மரத்திற்கு ஒப்பாயுளது. ஆங்கிலமோ வானுற ஓங்கி வளர்ந்து எங்கும் விழுதுகளை நீட்டிப் பரவிப் படர்ந்துள்ள ஆலமரம் எனக் காட்சியளிக்கின்றது.

ஆங்கிலமொழி குறுகிய கால அளவில் இத்துணைப் பேரளவில் வளர்ச்சியுறக் காரணம் என்ன? அதன் வளர்ச்சி வரலாறு யாது?

பதினான்காவது நூற்றாண்டில் **சாசர்** எழுதிய, "காண்ட்டர்பரிக் கதை" களும், **விக்லிப்** என்பார் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பைபிளும் ஆங்கில மொழியில் முதலில் தோன்றிய சிறப்பு நூல்கள் எனலாம். பதினாறாவது நூற்றாண்டில்தான் ஆங்கில மொழியின் மறுமலர்ச்சியும் எழுச்சியும் ஏற்பட்டதெனலாம். அக்காலத்தில் **ஸ்பென்சர்**, **பென்ஜான்சன்** என்னும் கவியரசர்கள் தோன்றினார்கள். அவர்களுக்குப் பின்னர், உலகப் புகழ் வாய்ந்த மகாகவி **ஷேக்ஸ்பியரும்** **டிரைடன்**, **மில்டன்** போன்ற கவியரசர்களும் **பேகன்** போன்ற பேரறிஞர்களும் தோன்றி ஆங்கில மொழியை இலக்கிய வளம் பெறச் செய்தார்கள்.

பதினேழாம் நூற்றுண்டிலிருந்து தொடர்ச்சியாக ஆங்கில மொழி பெருக்கத்துக்குப் பெருக்கமாக (Geometrical Progression) வளரத்தொடங்கி, இன்று உச்ச நிலையை அடைந்து உலகின் ஒரு தனிச் சிறப்பு மொழியாக விளங்குகின்றது. ஆங்கிலத்தைத் தாய் மொழியாகக்கொண்ட மக்கள் தம் சொல்லகராதியைப் பெருக்கிக்கொண்டனர். உலகின் எந்தக் கலையையும் எளிதில் எடுத்துரைப்பதற்கேற்றவாறு சொல் வளத்தை மிகுதிப்படுத்திக் கொண்டனர்; கல்வி கேள்வித் துறைகள் அனைத்திலும் ஈடுபட்டுச் சிந்தனைத் திறனையும் அறிவுத்திறனையும் நன்கு பயன்படுத்திப் பல நூல்களை எழுதி வெளிபடுத்தினர்; இன்னும் வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றனர்; உலகின் பிற மொழிகளில் காணப்படும் அரிய இலக்கியங்களையும், பிற நூல்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டனர்.

ஐரோப்பாவின் பண்டைக்காலச் சிறந்த மொழிகளாகிய இலத்தீன், கிரீக் ஆகியவற்றிலுள்ள இலக்கியப் புதையல்களும், இக்கால ஐரோப்பிய மொழிகளான பிரெஞ்ச், ஜெர்மன், ருஷிய, ஸ்பானிய மொழிகளில் காணப்படும் இலக்கியச் செல்வங்களும் இன்று ஆங்கில மொழிவழி படித்து இன்புறக் கூடியவைகளாயுள்ளன.

இவை மட்டுமா? கீழ்நாட்டு மொழிகளிலுள்ள அரிய இலக்கியங்களையும் ஆங்கிலேயர் இன்று தங்கள் மொழியில் பெயர்த்துள்ளனர். திருக்குறள், நாலடியார் போன்ற தலைசிறந்த தமிழ் நூல்களும், காளிதாசனின் சாகுந்தலம், கவுடில்யனின் அர்த்த சாஸ்திரம், கண்ணனின் பகவத் கீதை, வால்மீகியின் இராமாயணம், வட

மொழியாளரின் வேதங்கள், ஷாஹ்நாமா, மத்னவீ போன்ற பாரசீக நூல்கள், உமர் கையாம் பாடல்கள் முஸ்லிம்களின் திருமறையாகிய திருக்குர் ஆன் போன்ற நூல்களும் ஆங்கில மொழியை அணி செய்கின்றன வென்றால், அம்மொழி உயர்வுக்கென உழைத்தவர்களை யும், உழைப்பவர்களையும் என்னென்று பாராட்டுவது!

ஏறத்தாழ ஐந்து நூற்றாண்டுகளில் உலகெலாம் பரவி, உலக மக்கள் அனைவருக்கும் இலக்கிய விருந் தூட்டி, அறிவு வளர்ச்சி அளித்து, மக்களை முன்னேற்ற முறச்செய்ய ஓர் இளம் மொழியான ஆங்கிலத்திற்குத் திறன் ஏற்பட்டது அதனைத் தாய் மொழியாகக் கொண்டவர்களின் பேருழைப்பினாலன்றோ? ஓர் இளம் மொழி குறுகிய காலத்தில் இத்தகைய ஆற்றலைப் பெற்றுள்ள போது, மிகப்பழம் பெரும் மொழியாகிய தமிழுக்கு அத்திறன் ஏற்படாது போகுமோ! ஆனால் அத்திறனை உண்டாக்க வேண்டியது தமிழராகிய நம் கடமை அன்றோ!

உலகை இமைப்பொழுதில் அழிக்கவல்ல அணுக் குண்டு, நீர் வாயுக்குண்டுகள் தோன்றியுள்ள காலத் தில் நாம் வாழ்கிறோம். உலகம் காற்றிலும் கடிதில், எண்ணத்தின் விரைவையும் கடந்து, விரைந்து முன் னேறிக் கொண்டிருக்கிற நிலையில், நாம் மட்டும் ஆமை செல்லும் வேகத்தில் சென்று கொண்டிருத்தல் நலமா? பண்டைப் பெருமையை வெறும் வாயளவில் பேசிக் கொண்டே காலத்தை வீணிற் போக்குவது நமக்குப் பெருமை அளிப்பதாகுமா? நாம் ஒவ்வொருவரும் தமிழ் வளர்ச்சியில், அதன் தேமதுர ஓசை உலகெலாம் ஒலிக்குமாறு செய்வதில், அல்லும் பகலுமாக ஈடுபட்டு உழைக்க வேண்டாவோ?

காலத்திற்கேற்ப, தமிழர்களாகிய நாம் இலக்கியப் போக்கில் மாறுதல்களைச் செய்தல்வேண்டும். சிறந்த கருத்துடைய புத்தம் புதிய கலைகள் தமிழில் வெளிப் படுதல்வேண்டும். பிறமொழி நூல்களிலுள்ள சிறந்த இலக்கியங்களும் பிற கலைகளும் தமிழாக்கப்படவேண் டும். உலக மகா கவியாகிய **ஷேக்ஸ்பியர், மில்டன்,** ஜெர்மன் மகாகவி **கத்தே,** இத்தாலியக் கவி **டேண்டே,** பாரசீகக் கவி **பிர்தவுசி** முதலிய பேரறிஞர்கள் வெளி யிட்ட அறிவுக் களஞ்சியங்களைத் தமிழன் அடையச் செய்தல் வேண்டாவோ?

நம்மவருட் சிலர் புதிய கருத்துக்களுடன் கவிதை களையும். உரைநடைகளையும் இப்போழ்து எழுதிவந்த போதிலும், அவை மக்களின் மன நிலைமையையும் நாட்டின் நிலைமையையும் சரிவர எடுத்துக்காட்டி, மக்களுக்குப் புத்துணர்ச்சியைஉண்டாக்கி, மறுமலர்ச்சி ஏற்படுத்தக்கூடிய அளவிற்கு இல்லை எனலாம். **சார்லஸ் டிக்கன்ஸ், ஜேன் ஆஸ்டின், பெர்ல் பக்** போன்ற ஆங்கில நாவலாசிரியர்களும், விஞ்ஞானிகளும், அர சியல், பொருளாதார அறிஞர்களும் சமூகத்திடையே காணப்பட்ட இயற்கைத் தன்மைகளையும் குறைகளை யும் தங்கள் நூல்களில் எடுத்துக்காட்டி மக்கள் இனத் தைத் திருத்தி நாட்டை முன்னேற்றமடையச் செய்துள் ளனர்; அரசியல் அறிவு, விஞ்ஞான அறிவு, பொருளா தார அறிவு முதலியவை மக்களிடை வளர்வதற்கு அடிகோலி-மக்களையும் நாட்டையும் முன்னணிபெறச் செய்துள்ளனர்.

இதுபோலவே, நம் நாட்டில் பிறமொழிகள் படித் துள்ள தமிழ்ப் பேரறிஞர்கள், அரைத்த மாவையே அரைத்துக் கொண்டிருப்பதைவிட்டு, தங்கள் கவனத்

தைப் புது முறையில் செலுத்தி, மக்கள் கவனத்தைக் கவரும் வண்ணம் புதுக் கருத்துக்களைப் பரப்பி, மக்களை நல்வழிப்படுத்தும் நல்ல நூல்களை எழுத முனைந்தால், தமிழ் மொழி உலகில் தான் இழந்துள்ள இடத்தை விரைவில் மீண்டும் பெற்றுக்கொள்ள இயலும்.

நம் தமிழகத்தில் சிறந்த விஞ்ஞானிகள் இல்லையா? மருத்துவத் துறையில், அரசியல் துறையில், பொறியியல் துறையில், பொருளாதாரத் துறையில், கைத்தொழில் துறையில் எனப் பல்வேறு துறைகளில் பண்பட்ட பேரறிஞர்கள் நம் தமிழ் நாட்டில் இல்லாமற் போகவில்லை. இவர்கள் தங்கள் பேரறிவைத் தமிழ் மக்களுக்குப் பயன்படும் துறையில் தமிழில் நூல்களாக வெளியிட்டுத் தமிழன்னைக்குத் தொண்டாற்றினால் நாட்டு முன்னேற்றம் விரைவில் உண்டாகுமே!

நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாகத் தமிழ் வளரவேண்டும் என்றால், புத்தம் புதிய நூல்கள் பல வெளி வருதல்வேண்டும். இப்பணியில் சென்னைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் முதலியவை பேரளவில் பங்கெடுத்துக் கொள்ளுதல்வேண்டும். ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களைப் பாருங்கள்! ஆங்கில மொழி வளர்ச்சியில் அவை எடுத்துக் கொண்டுழைத்த பங்கினை அளவிட்டுக் கூற இயலுமோ! பல பாகங்கள் கொண்ட ஒரு பெரும் நூல் தொகுப்பான ஆக்ஸ்போர்டு பேரகராதி, பிரித்தானியா பல்கலைத் தொகுப்புக் களஞ்சியம் (Encyclopeadia Brittanica) முதலியவற்றைப் பாருங்கள். இவை உலக அறிஞர் போற்றும் தனி நூல் தொகுப்புகளாக விளங்குகின்றன.

இவ்வாறான பெரும் தொகுப்பு நூல்கள் ஆங்கிலத்தில் ஒவ்வொரு துறையிலும் பல இருப்பதை நாம் காண்கிறோம். முன்னோர் முதுமொழிகளைத் திரட்டி வெளியிடப்பட்டுள்ள நூல்கள் ஆங்கிலத்தில் பல உள. ஆங்கில நூல்களுடன் தமிழ் நூல்களையும் அடுக்கி வைத்துள்ள கன்னிமாரா பொது நூலகம், பல்கலைக் கழக நூலகம், அடையாறு நூலகம் முதலியவற்றிற்குச் சென்று பார்த்தால் ஆங்கில நூல்களின் பெருக்கத்தையும் தமிழ் நூல்களின் சுருக்கத்தையும் அறியலாம். மொழி வளர்ச்சிக்கென உழைக்கும் மேனாட்டுப் பல்கலைக் கழகங்கள் தவிர, நம் நாட்டில் ஐதராபாதிலுள்ள உஸ்மானியா பல்கலைக் கழகம் உர்தூமொழியை வளப்படுத்துவதற்கு அரும்பாடு பட்டுழைத்திருப்பதையும் தமிழர்கள் கவனித்தல் வேண்டும். உலகத்தின் சிறந்த நூல்களையெல்லாம் உஸ்மானியா பல்கலைக் கழகம் உர்தூ மொழியில் கொணர்ந்து அம்மொழியை அறிவுக் களஞ்சியத்தின் இருப்பிடமாக ஆக்கிவரும் வேலையில் முனைந்திருக்கிறது.

திரு. அவினாசிலிங்கம் குழுவினர் தமிழில் பல்கலை நூலைப் பத்துப் பிரிவில் வெளியிட முனைந்து, ஒரு பிரிவை வெளியிட்டு மற்றப் பிரிவுகளை வெளியிடத் தொண்டாற்றி வருவது வரவேற்கத் தக்கது. சென்னைப் பல்கலைக் கழகம், தமிழ்ப் பேரகராதி ஒன்றை வெளியிட்டிருப்பதும் பாராட்டுதற்குரிய செயலே. இவ்வாறு மேலும் பல துறைகளில் பெருந்தொகுப்பு நூல்கள் வெளிவருவதல் வேண்டும். அவ்வை எளிய மக்களும் வாங்கும் வகையில் விலையிடப்பட்டனவாக இருத்தல்வேண்டும்.

எனவே, தமிழ்ப் பேரறிஞர்களும், பெருஞ் செல்வர் களும் தனிப்பட்ட முறையில் தமிழை வளர்க்க முயல்வதுடன் பல்கலைக் கழகங்களும் இத்திருப்பணியில் பெரும்பங்கெடுத்துக்கொண்டால் மிக விரைவில் நம் தாய் மொழியாகிய இன்பத்தமிழ் பெரும் முன்னேற்றம் அடையுமென்பதில் ஐயப்பாட்டிற்கு இடமில்லை.

---

# 2. மூன்று கேள்விகள்

(சிறுகதை)

தினைப்புனம் காத்திருந்தாள் திங்கள் முகத் தையல் ஒருத்தி. அவள் அழகில் இணையற்றவள் ; கட்டமைந்த உடலுரம் வாய்ந்தவள் ; பச்சைப் பசேலெனப் பெருங் காட்சியளிக்கும் புனத்தினிடையே அவள் கையில் கவணுடன் பரண்மீது நின்றாள். அக்கோலம், தினை யுண்ணவரும் புட்களின் கூட்டத்துடன், கையிற் சிலை யேந்திய வீரமகள் ஒருத்தி போருக்கெழும் காட்சியை நல்கியது. அவள் முகம் அறிவாற்றலைப் புலப்படுத் தியது; நெஞ்சுரத்தைத் தோற்றுவித்தது; புறவழகே யன்றி அகவழகும் பெற்றவள் அவள் என்பதை விளக்கியது.

அவ்வெழிலணங்கை மறைவிடத்தில் நின்று நோக் கினான் ஓர் இளமகன். அவளுடைய பேரெழிலும், வீரத் தோற்றமும் அவன் உள்ளத்தைக் கவர்ந்தன. அவளே தன் வாழ்க்கைத் துணைவியாவதற்குரியவள் என அவ்விளமகன் உறுதி பூண்டான்; அவ்வணங்கின் உள்ளப் பண்பினை அறிவான்வேண்டி, அவளிருக்கும் பரணை அணுகினான்.

* * *

பண்டைக்காலத் தமிழகத்தில் இவை போல்வன அன்றாடக் காட்சிகள். ஒத்த கல்வியும் நலனும் பண்பும் உடையோரே ஒருவர்மீதொருவர் வேட்கை கொள்வர்; மணம் புரிவர். அக்காலப் பெண்மக்கள் ஆடவரைப்

போன்று கலையறிவும் மனவலியும் வாய்க்கப் பெற்றிருந்தனர்; இதனால் தமக்குரிய வாழ்க்கைத் துணைவரைத் தாமே தேர்ந்தெடுக்கும் திறமையும் உரிமையும் பெற்று விளங்கினர்.

அறிவாற்றலும், ஆண்மையும், மனவலிமையும், கல்விச் செல்வமும் பெற்றிராத ஆண்மகனைப் பெண் ஒருத்தி அப்பண்டைக் காலத்தில் விழைவதில்லை. அப் பண்டைக் கால மக்கள், ஆண்களும், பெண்களும் வீரத்தை உயிரென ஓம்பினர். அவர்கள் வாழ்வே வீர வாழ்வு. வீர உணர்ச்சியை அவர்கள் உயிர்ப் பண்பெனக் கருதினர்; இப்பண்பிலா மக்களை 'மாக்கள்' என்றே எண்ணினர். எனவே, பண்டை மக்கள் தக்கவாறு கல்வி பயின்று அறிவை வளர்த்தனர்; ஊக்கம் உயர்வூட்டும், முயற்சி திருவினையளிக்கும் என்று வாழ்ந்தனர்; உடலுரமும் நெஞ்சுரமும் பெற்றனர்; வீர உணர்ச்சி காட்டா நாள் வெறு நாளென்றெண்ணினர்; வீரச் செயலாற்றிப் புகழை நிலை நிறுத்த முயல்வதைத் தம் பிறப்புரிமையெனக் கருதினர்.

பெண்கள் புலமை பெற்றுப் பொலிவுற்றதும், புறவாயில் வந்த புலியினைக் கண்டஞ்சாது அதனைச் சுளகால் விரட்டியடித்ததும், போருக்கஞ்சாது கணவனையும் புதல்வனையும் உடன் பிறந்தோரையும் களத்திற்கனுப்பிக் களித்ததும், கணவனைக் கொன்ற நீதி பிறழ்ந்த மன்னனை நீதியுணர்ந்து உயிரிழக்கச் செய்ததும், புலிப்பற்களையும் யானைக் கோட்டினையும் தலைமகன் தலைமகளுக்குப் பரிசிலளித்ததும், ஏறு தழுவியதும், சங்க இலக்கியங்கள் தமிழ் மக்கள் வீரத்தை மெய்ப்பிக்கத் தரும் சான்றுகும்.

எனவே, தினைப்புனம் காத்த **எழிலியை** அணுகித் தன் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தி, அவள் உள்ளப் பண்பை உய்த்துணர வெண்ணிய இளமகனும் **மாறன்** தன் செயலைத் தவறுடையதாகக் கருதவில்லை.

பரண்மீது அமர்ந்திருந்த எழிலி, தான் முன்னர் அறிந்திராத ஆடவன் ஒருவன் தன்னை நோக்கி வருதலைக் கண்டாள்; அஞ்சவில்லை; அவன் வந்தபுறமே திரும்பி நின்றாள்; அவன் அங்கு வந்ததன் நோக்கத்தை அறிய முனைந்தாள்.

அவளது பெருமிதத் தோற்றத்தைக் கண்ட இளமகன் தன் உள்ளக்கிடக்கையை உடனே எடுத்தியம்ப அஞ்சினான்; எனினும், அவள்பால் ஏற்பட்ட அன்புப் பெருக்கு உந்த, தான் அங்குப்போந்த கருத்தை எடுத்துரைத்தான். அதனைச் செவியேற்ற எழிலி, "இளமகனே! தனித்திருக்கும் என்பால், மணவுரை நிகழ்த்துவது வீரச் செயலாமோ?" என்று கேட்டாள்.

**மாறன் :** தமிழ் நாட்டுப் பண்பினின்று வழுவிய செயல் புரிந்தேனோ ?

**எழிலி :** தமிழ் நாட்டுப் 'பண்பு—இஃதொன்று மட்டுமா? வீரம், ஒழுக்கம், அறிவு என்பவையன்றோ அப்பண்பில் முதலிடம் பெறுபவை ?

**மாறன் :** ஆம்; அதை நான் அறிவேன்.

**எழிலி :** நல்லது; இங்கு வருமுன் என் பெற்றோர் யாவரென அறிந்தீரோ ?

**மாறன் :** உன் பெற்றோரும், என் பெற்றோரும் யாவராயினும் ஆகுக. உன் உளப் பண்பினை அறிந்தாலன்றோ அவர்களை அணுகுவதற்கு இயலும்!

**எழிலி :** நான் அறிவாற்றலுடைய வீரனையே மணப்பேன்; மற்றையோரைக் கண்ணெடுத்தும் பாரேன்.

**மாறன் :** நீ கண்கொண்டு பார்க்கும் நான், அறிவற்ற கோழை என்பது உன் எண்ணமோ ?

**எழிலி :** நீர் அறிவாற்றல் உடையவர் என்பதை நான் எங்ஙன மறிவது? உம் வீரத்தை விளக்கும் செயல்கள் எவையென நான் அறிந்துளேனு ?

**மாறன் :** நான் போருக்கஞ்சாத மறவன்; என் தாய் நாட்டையும் தாய்மொழியையும் இகழ்பவரையும், சிதைக்க முயல்பவரையும் விடேன். இழுக்கினைக் கொன்று, உரியதைக்கொள்ள என் வீரம் பயன்படும். வங்கத்துப் பேர்ரில் நான் அடைந்த சின்னங்களை என் தோளிலே பார்! (தோள்களைக் காட்டுகிருன்). கான வேங்கைகள் பலவற்றைக் கொன்று, உழவுத்தொழில் குன்ருது பெருக, உதவியதன் சின்னமாக என்பால் உள்ள புலிப்பற்கள் எண்ணிலடங்கா...........

**எழிலி :** இருக்கலாம்; உம்முடைய அறிவாற்றலை விளக்கும் சின்னம் எது? அதனை அறிந்த பிறகே என் உள்ளக் கருத்தினை உரைப்பேன்.

**மாறன்:** என் அறிவாற்றலை உனக்கு விளங்கச் செய்வது எங்ஙனம் : அமயம் வாய்த்துழி அதனை அறிவாய்.

**எழிலி :** இல்லை; இவ்வமயமே, இவ்விடத்தே அதனை ஆய்தல் கூடும்.

**மாறன் :** நல்லது; உன் ஆய்வுக்கு நான் இணங்குகிறேன்.

**எழிலி :** நான் மூன்று கேள்விகள் கேட்பேன். விடை தராவிடின், அறிவிலியென்று உம்மை யிகழ்ந்து என் கைக்கவணில் கல் வைத்து அடித்து விரட்டுவேன்.

**மாறன் :** சரி; விடை யளிப்பின்..........!

**எழிலி :** (சற்றுச் சிந்தித்து) முதலில் விடை யளியும்; பிறகு அது குறித்துக் கவனிப்போம்.

**மாறன் :** தோல்விக்குரிய தண்டனையை அறிந்தேன்; வெற்றிக்குரிய பரிசு அறிவிக்கப்பட வில்லையே!

**எழிலி :** முதலில் வெற்றி ஏற்படட்டும்; பரிசு பின்னர் விளங்கும்.

**மாறன் :** நல்லது; ஆய்வுக்கு நான் ஆயத்தமா யுள்ளேன்.

**எழிலி :** அங்ஙனமாயின், கேளும்; "வியப்பூட்டும் விலங்கொன்றுண்டு : அதனை விலங்கென்பதோ, புள்ளினம் என்பதோ பொருந்ாது. அதற்குக் கால் களுமில்லை, இறகுகளுமில்லை; அது நிலத்தில் நிற்பது மில்லை, விண்ணிற் பறப்பதுமில்லை. ஆயின், அது மக்களின் உயிரைச் சிறிது சிறிதாகக் கொள்ளை கொள்ளும் ஆற்றல் உடையது." இத்தகைய ஒன்றன் பெயர் யாது? இதனை நீர் கண்டதுண்டோ?

**மாறன் :** (சற்றுச் சிந்தித்து) ஆம்; அதன் பெயர் **பேராசை**; இதனை நான் காணவோ, பெறவோ விரும்ப வில்லை.

**எழிலி :** நல்லது; இரண்டாவது கேள்வி; "கனி ஒன்றுளது. அதன் சுவையை, இன்பத்தை—மக்கள், விலங்கு, பறவை, முனிவர், துறந்தோர் எவரும் வெறுக்கவோ, மறக்கவோ முடியாது. அதன் சுவை

எடுத்தியம்பும் எல்லை கடந்தது.''—அத்தகைய கனி யாது?

**மாறன் :** (ஆழ்ந்து யோசித்து) புரிந்தது.குழந்தை என்னும் கனியையே நீ கூறினாய். முற்றுந்துறந்த முனிவராலும் மறக்கமுடியாதன்றோ மக்கள் மீது அன்பு!

**எழிலி :** (மகிழ்ந்தவளாய்) மிகச் சரி; மூன்றாவது கேள்வியைக் கேட்கின்றேன்; வெற்றியும் தோல்வியும் இவ்வொரு கேள்வியிலேயே தொக்கிக் கிடக்கின்றன.

**மாறன் :** (துணிவு பெற்றவனாய்) நல்லது; கேள்.

**எழிலி :** எவரும் விரும்பாத ஒன்றுளது; ஆனால் அது விரும்பினாலும் விரும்பாவிடினும் ஒவ்வொருவரும் அடைந்தேயாகவேண்டும் பொருள் ஆகும். அவ்வாறானதொரு பொருள் யாது?

**மாறன் :** (மகிழ்ச்சிப் பெருக்குடன்) எவர் விரும்பினும் விரும்பாவிடினும் வரக்கூடியது **இறப்பே** ஆகும். என் விடை பொருத்தமாயுளதா?

**எழிலி :** (சற்று நேரம் அமைதி பூண்டு அறிஞரே! வெற்றி பெற்றீர். நீர் அறிவாற்றல் மிக்கவரென்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். நீர் போகலாம்.

**மாறன் :** இதுவா உன் நேர்மை! வெற்றிக்குரிய பரிசுபெறாமல் நான் எங்கு ஏகுவது?

**எழிலி:** (நகைத்து) உம் துணிவையும் அறிவுக் கூர்மையையும் கண்டு மகிழ்கிறேன். உம் பெற்ருேரை என் பெற்ருேரிடம் அனுப்பி, அவர்கள் இணக்கம் பெற்ற பின் நாம் மணந்து கொள்வோம். என் பெற்ருேரிடம் நான் என் இணக்கத்தைத் தெரிவிப் பேன்.

மாறன் இவ்விடை கேட்டு மகிழ்ச்சிப் பெருக்குடன் தன் ஊருக்குச் சென்ருன்; தன் பெற்ருேரிடம் நிகழ்ந்தவற்றைக் கூறினன். மகன் விருப்பத்திற் கிணங்கிய அவன் பெற்ருேர் ஆவனசெய்து, முறைப்படி எழிலியையும் மாறனையும் வாழ்க்கைத் துணைவர்கள் ஆக்கிவைத்தனர்.

---

# 3. மைசூர் இன்பச் செலவு

இவ்வாண்டு இன்பச் செலவில் எழில் மிக்க **எருமை நாட்டினைக்** காணுதல் வேண்டும் எனத் தலைமை ஆசிரியர் பணித்தபோது, என்றுமில்லாப் பேருவகையுணர்ச்சி மனத்தில் பொங்கியது; எருமை நாடு என்ற போதினில், பண்டைத் தமிழ் நாடு **அருவா நாடு, குடநாடு, குட்டநாடு** முதலிய பன்னிரண்டு நாடுகளாகப் பிரிந்திருந்ததும், அவற்றுள் ஒன்றாக எருமை நாடு அமைந்திருந்ததும் நினைவில் எழுந்தன. 'பண்டைத் தமிழக நாடுகளுள் ஒன்றிற்குச் செல்கிறோம்!' என்ற உணர்ச்சி மாணவர், ஆசிரியர் ஆகிய அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் திளைக்க வைத்தது. எருமை நாடு எனும் பெயர், ஆரியம் இந்நாட்டில் நுழைந்த பிறகு **மகிஷாசூர்** என மாற்றப்பட்டுப் பின், ஆங்கிலம் நுழைந்த பிறகு, **'மைசூர்'** என்றாகிவிட்டது என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். **மகிஷாசுரன்** என்னும் கொடிய அரக்கன், கொற்றவையால் அடக்கி ஒடுக்கப்பட்ட இடமாகலின், அவ்வரக்கன் பெயரே மகிஷாசூர் என அந்நாட்டிற்கு இடப்பட்டதென்று புராணம் கூறுகிறது. அதற்கேற்ப அந்நாட்டின் காவல் தெய்வம் **சாமுண்டீசுவரி** (மகிஷாசுர மர்த்தனி) யாகவே விளங்குகிறது.

மைசூர் நாடு, கடம்பர், ஹொய்சலர், விஜயநகர மன்னர் என்ற மன்னர் பரம்பரையினர் பலரின் ஆட்சியைக் கண்டதாகும். ஒரு காலத்தில் அந்நாடு அசோகரின் மௌரியப் பேரரசில் இணைந்திருந்தது.

இப்போது ஆட்சிபுரியும் உடையார் மரபினர் 1399-இல் மைசூர் வந்து குடியேறி, 18-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிவரை ஆண்டிருந்தனர். பிறகு அந்நாடு **ஹைதர் அலி, திப்பு சுல்தான்** ஆட்சிகளுக்குட்பட்டதெனினும், 1799-இல் திப்பு சுல்தான் ஆங்கிலேயரால் தோற்கடிக்கப்பட்டவுடன், முன்னைய உடையார் மரபினர்வசமே மைசூர் ஆட்சி ஒப்படைக்கப்பட்டது.

இத்தகைய மைசூரைக்காண, நாங்கள் சென்னையினின்று 'பெங்களூர் மெயில்' வண்டியில் இரவு புறப்பட்டோம்; 222 கல் தொலைவிலுள்ள பெங்களூர் நகரை ஒன்பதே முக்கால் மணி நேரத்தில் அடைந்தோம். உடனே அனைவரும் காலைக்கடன்களை முடித்து, புகைவண்டி நிலயத்திலிருந்த சிற்றுண்டிச்சாலையில் பசியாறினோம்; பின்பு அவ்வெழில் மிக்க நகரங்காணச் சென்றோம்.

மைசூர் நாட்டின் முதன்மை வாய்ந்த நகரம் **பெங்களூரே** ஆகும். அங்குத்தான் நாட்டாட்சித் தலைமை மன்றங்கள் அமைந்துள்ளன. அந்நகரம் பதினேழாம் நூற்றுண்டில் **கெம்பே கௌடா** என்பவரால் முதன்முதலாக நிறுவப்பட்டது. இன்று அந்நகரம் 25 சதுரமைல் சுற்றளவுடன் சற்றேறத்தாழப் பத்து நூறுயிரம் குடிமக்களைக் கொண்டு விளங்குகின்றது. பெங்களூர் நகர் கடல் மட்டத்திற்கு 3000 அடி உயர்ந்து விளங்கும் பீடபூமியில் அமைந்திருப்பதால், அங்கு வெப்ப நிலை எப்போதும் 76·2 டிகிரிக்கு மேற்படுவதில்லை. **நகரப் பகுதி, பாசறைப் பகுதி** என அந்நகரம் இரண்டாகப் பிரிந்துள்ளது. அவ்விரு பகுதிகளிலும், வரலாற்றுப் புகழ்வாய்ந்த அரண்கள், தொழிற்சாலைகள், எழில் மிக்க பூஞ்சோலைகள், ஆட்சி மன்றங்கள், பொருட்காட்சி நிலயம், நூல் நிலயம், சந்தைகள்

எனக் காண்பதற்குரியவை பல உள. அங்குத் திரைப் படக் காட்சிக் கொட்டகைகள் மட்டும் நாற்பதுக்கு மேலிருக்கின்றன. இத்துறையில் அந்நகர் இந்தியாவில் இரண்டாவதிடத்தைப் பெறுகின்றது.

பெங்களூர் என்னும் பெயர் உண்டானதற்குக் கூறப்படும் காரணம் விந்தை மிக்கது. அந்நகரைத் தோற்றுவித்தவராகிய கெம்பே கௌடா, முதலில் அந்த இடம் வந்தபோது, கிழவி ஒருத்தி வெந்த கடலையை அவருக்குப் பசியாறக் கொடுத்ததாகவும், அதனால் அவர் அந்த இடத்திற்குப் '**பெந்தகாளு**' என்னும் பெயரிட்டதாகவும், பின்னர் அப்பெயர் மருவிப் பெங்களூர் என்றாயிற்றென்றும் கூறப்படுகிறது.

நாங்கள் முதலில் அந்நகரிலுள்ள **வேட்கோவர் தொழிற்சாலை** (Porcelain Factory) சென்றோம். அங்கே வெண்களிமண் கொண்டு பலவகைப் பீங்கான் சாமான்கள் செய்யப்படுகின்றன. பீங்கான் தட்டை, கோப்பை, கெண்டி, கிண்ணம், பதுமை, மின்சார 'இன்ஸுலேட்டர்' (Insulator) முதலிய பலவகை யான பொருள்கள் அங்கு உற்பத்தி செய்யப்படு கின்றன. வெள்ளைக் களிமண் கொண்டுவந்து நீரிற் கரைத்து, கல் மணல் முதலியவை அகலச் செய்து, களிமண்ணைத் தனியே பிரித்து எடுத்துச் சிறு உருளை களாகச் செய்து, பின்பு அவற்றை உருக்களாக்கி உலர வைத்துச் சுட்டுப் பளபளப்பாக்கி, வண்ணங்கள் தீட்டி விற்பனைக்கு அனுப்புகின்றனர். இவையனைத்தும் மின்சாரத்தின் உதவி கொண்டே நடைபெறுகின்றன. சூளையிடும் அடுப்பும் மின்சார அடுப்பே. வண்ணங்கள் தீட்டுவது ஒன்றே கையால் ஆகும் வேலை.

அத்தொழிற்சாலையை அடுத்துக் **கண்ணுடித் தொழிற்சாலை**யும் (The Mysore Glass and Enamel Works Ltd.,) மின்சார விளக்குத் தொழிற் சாலையும் (Mysore Lamp Works) அமைந்திருக்கின்றன. கண்ணுடித் தொழிற்சாலையில் கண்ணுடிப் பொருள்கள் அனைத்தும் உற்பத்தியாகின்றன. விளக்குத் தொழிற் சாலையில் மின்சார 'பல்புகள்' செய்யப்படுகின்றன. வேட்கோவர் போர்ஸிவின் தொழிற்சாலைக்கு அறு நூறு அடித்தொலைவில் **இந்திய விஞ்ஞான ஆராய்ச்சி நிலையம்** (The Indian Institute of Science) அமைந் துள்ளது. அந்த நிலையம் **சர். சி. வி. இராமன்** அவர்கள் தலைமையில் மிகத் திறம்பட நடைபெறுகிறது. அங்கு நடைபெறும் ஆராய்ச்சிகளின் பயனுகப் பல புதிய தொழில்கள் அங்குத் தோன்றுகின்றன. அவற்றை எல்லாம் சுற்றிப் பார்த்த பிறகு, நாங்கள் புகைவண்டி நிலையம் மீண்டோம்.

பகலுணவை அங்கே முடித்துக்கொண்டு **அரசாங் கச் சவுக்காரத் தொழிற்சாலை** (Government Soap Factory) சென்ருேம். வழியில் **சிட்டி மார்க்கெட்டு** (City Market) என வழங்கப்படும் **கிருஷ்ண ராஜேந் திர அங்காடி**யைக் கண்டோம். அங்கே பெங்களூர்க் காய்கறிகளும், பழ வகைகளும் பன்னிறத் தோற்றம் அளித்துக் காண்போர் கருத்தை ஈர்த்த வண்ணமிருந் தன. அவற்றைக் காண்போர், எதையேனும் வாங்கா மல் வெளியேறுதல் கடினம்.

நாங்கள் அரசாங்கச் சவுக்காரத் தொழிற்சாலையை அடைந்தபோது பகல் மணி இரண்டாகிவிட்டது. அதில் பலவகையான சவுக்காரங்கள் (Soap) செய்யப்

படுகின்றன. உலகப் புகழ் வாய்ந்த **மைசூர் சந்தனச் சவுக்காரம்** உற்பத்தியாவது அந்தத் தொழிற்சாலையிலே ஆகும். அங்கே முதலில் துணி துவைக்கப் பயன்படும் சாதாரணச் சவுக்காரங்களை ஆறடி நீளம், எட்டடி உயரம், இரண்டடிக் கனமுள்ள பாளங்களாகச் செய்கின்றார்கள்; பின்னர் அவற்றைச் செதுக்கி, நிறமும் மணமும் ஊட்டிக் குளிக்கும் சவுக்காரங் களாக்குகின்றனர். சவுக்காரங்களைச் செய்யப் பயன் படும்பொருள்களைக் கொதிக்க வைத்தல், பின்பு பெரிய பாளங்களாக அச்சில் ஊற்றிக் குளிரவைத்து இறுகச் செய்தல், இறுகிய பின் அறுத்து நாடாக்களைப்போலச் சீவுதல், சீவப்பட்டவை உலர்ந்ததும் நிறமூட்டல், நறுமண மூட்டல், பின்பு அச்சீவல்களைத் தடித்த திரணைக் கம்பி போல அழுத்தி வெளிப்படுத்தல், அதனைச் சிறுசிறு கட்டிகளாக அழுத்தி முத்திரை யிடுதல் ஆகிய அனைத்தும் மின்சார உதவியினால் நடை பெறுகின்றன. சவுக்காரக் கட்டிகளின்மீது காகிதம் சுற்றிப் பெட்டிகளில் அடைக்கும் வேலையைமட்டும் பெண்கள் செய்கின்றார்கள்.

அங்கிருந்து தொழிற் பயிற்சி நிலையம் (Occupational Institute) சென்றோம். கோலார்த் தங்க வயலில் நிலத்திற்கடியில் சுரங்கம் வெட்டித் தங்கம் எடுக்கும் முறையினை அங்கே சிறு அமைப்பாகச் (Model) செய்து வைத்து, அங்குச் செல்லும் மாணவர்க்கு விளக்குகின்றனர். மைசூர் நாட்டில் கிடைக்கும் தாதுப் பொருள்கள் (Minerals), மர வகைகள், கற்கள் முதலிய பல பொருள்கள் அங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. சுரங் கத்தில் துளையிட்டுச் சென்று தங்கம் வெட்டுவதற்குரிய

கருவிகளும் அங்குள. அங்கிலயத்தில் பல்வேறு வகையான தொழிற் பயிற்சிகள் மைசூர் மாணவர்க்கு அளிக்கப்படுகின்றன. திரைப்படம் எடுத்தல், அதற்குரிய 'பிலிம்' செய்தல் முதலியவை அங்கு மாணவர்க்குக் கற்பிக்கப்படுகின்றன. படம் பிடித்தல் முதல் 'பிளாஸ்டிக்'குச் சாமான்கள் செய்தல் ஈருகப் பலவகையான தொழில்களில் மாணவர்க்கு அங்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. அந்த மகத்தான அழகிய கட்டடத்தின் ஒரு பகுதியை மாணவர்களும் ஆசிரியர்களும் சேர்ந்தே கட்டி முடித்தார்கள் என்ற உண்மையை அங்குள்ள நிலய உதவித் தலைவர் கூறக் கேட்டு நாங்கள் பெருவியப் பெய்திஞேம். அதனுல், அரசாங்கத்துக்குச் செலவு குறைந்ததுடன், மாணவரும் ஆசிரியரும் ஊதியம் பெற்று மகிழ்ந்தனர். மாணவரும் ஆசிரியரும் அதில் முனைந்ததால், கூலிக்காரர்போன்று காலத்தை வீணுக்காமல், செய்வதைத் திருந்தச் செய்து முடித்திருக்கின்றனர் என்பது அதனைக் காண்கையில் நன்கு உணரக் கிடக்கிறது. அதனை அடுத்து, '**ஸ்ரீ கிருஷ்ண ராஜேந்திர சில்வர் ஜுபிளி டெக்னுலஜிக்கல் இன்ஸ்டிடியூட்டு**' இருக்கிறது. அக்கட்டடம் பெங்களூர் நகரிலுள்ள மிக அழகிய கருங்கற் கட்டடங்களுள் ஒன்ருகும்.

அவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு, '**கப்பன் பூங்கா**' சென்ருேம். அப்பூங்கா மிக அழகியதாய் விளங்குகிறது. அங்குள்ள சிற்றுண்டிச்சாலையில் தேநீர் அருந்திவிட்டு '**ரஸ்ஸல்**' **அங்காடி** (Russel Market) சென்ருேம். அந்த அங்காடி சென்னை மூர்மார்க்கெட்டைப் போன்றது. ஆனுல், சிறியது. அவ்வங்காடியின் எதிரில் கிறிஸ்தவக் கோயில் ஒன்று

**'நாட்ரடேம் சர்ச்சு'** அமைப்புப் போன்று கட்டப்பட்டுள்ளது.

ரஸ்ஸல் அங்காடியைப் பார்த்து முடிந்ததும் நேரே **'லால்பாகு'** சென்றோம். லால்பாகு என்பது அரசாங்க இளமரக்கா ஆகும். அங்கு எல்லாவகைத் தாவர இனங்களும் அழகான முறையில் வளர்க்கப்பட்டிருக்கின்றன. பன்னிறப் பூக்கள் ஆங்காங்கு மலர்ந்து மணம் பரப்பிய காட்சி மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. அரிய மூலிகை இனங்கள் ஒருபாலும், பலவகைப் புல்லினங்கள் ஒருபாலும், செடி கொடி மரங்கள் ஒருபாலும் ஆங்குக் காணப்பட்டன.

லால்பாகின் கிழக்குக் கோடியில் ஒரு பெருங்கற்பாறை இருக்கிறது. அப்பாறைமீது கெம்பே கௌடாவின் நினைவுச் சின்னம் ஒன்று எழுப்பப்பட்டிருக்கிறது.

லால்பாகைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு, **அவெனியூ தெரு** வழியே சென்று திப்புசுல்தான் கோட்டையைக் கண்டோம். இருபுறமும் முற்றம் உள்ளதாய், நாற்புறமும் தாழ்வாரம் (Balcony) உடைய மாடி ஒன்றுள்ளதாய், எங்கும் சிற்ப வேலைப் பாடுள்ளதாய்த் தூண்களனைத்தும் சிற்பங்கள் செதுக்கப்பட்டதாய் அமைந்த அழகிய சபாமண்டபத்தையே, அங்குள்ளோர் கோட்டை என்கின்றனர். திப்புசுல்தான் மக்கள் முறையீடுகளைக் கேட்டறிந்ததும், நீதி வழங்கியதும் அந்தச் சபாமண்டபத்திலிருந்தே என்பதை அறிந்தோம். அதனையும், அதன் அருகிலுள்ள திப்பு சுல்தானால் ஆதரிக்கப்பட்டு மானியம் வழங்கப்பட்ட அரங்கநாதர் கோவிலையும் பார்த்துக்கொண்டு புகை வண்டி நிலையம் சென்றோம். உணவு கொண்டபின்

மைசூர் பாசஞ்சரில் மைசூர் நோக்கிப் புறபட்டப் நாங்கள், நாற்பத்தாறு மைல் தொலைவில் இருக்கும் **மத்தூரை** ஐந்துமணி நேரப்பயணம் செய்தபின் அடைந்தோம். சிவசமுத்திர நீர்வீழ்ச்சியைக்காண விழைபவர்கள் புகைவண்டிப் பாதைவழியே செல்ல விரும்பினால், மத்தூர் புகைவண்டி நிலையத்தில் இறங்கி, அங்கிருந்து இருபத்தேழு மைல் தொலை பஸ்ஸில் போகவேண்டும். இதற்குப் போகவர இரண்டரை ரூபா கட்டணம். இவ்வழியிலல்லாமல் பெங்களூரிலிருந்தே நேரே பஸ் மூலமாகவும் சிவசமுத்திரம் போகலாம்.

மத்தூர்ப் புகைவண்டி நிலையத்தில் நாங்கள் அவ் விரவினைக் கழித்தோம்; விடிந்ததும் அருகிலிருந்த வாய்க்காலை அடைந்து, காலைக்கடன்களை முடித்தோம்; பசியாறினோம்; பின்னர், பஸ் ஒன்றை எங்களுக்கென்றே தனியாக அமைத்துக்கொண்டு சிவசமுத்திரம் சென்றோம்.

காவிரியாறு குடகு நாட்டில் மேற்கு மலைத் தொடரைச் சேர்ந்த **சையமலை**யில் தோன்றி, மேட்டு நிலத்தின் வழியே நெடுந்தொலை பாய்ந்து வந்து, சிவ சமுத்திரத்திற் கருகில் சமதரையில் விழுகிறது. காவிரியாறு சமதரையில் பாய்ந்தோடத் தொடங்கும் முதலிடம் அதுதான். அங்குக் காவிரி சற்றேறக்குறைய 250 அடி ஆழத்தில் அருவிகளாய் வீழ்வது கண்கொள்ளாக் காட்சியாய் இருக்கிறது. இயற்கை எழில் நலங்கள் யாவும் ஒருங்கே அமையப்பெற்ற, கைபுனைந்து இயற்றுக் கவின்பெறு வனப்பு, கண்டோர் கருத்தைக் கவர்வதில் வியப்பொன்றுமில்லை. மூன்று நான்கு அருவிகளாகப் பிரிந்து, பால் வழிவது போலக் காவிரி

நீர் நுரைத்துப் பொங்கி விழும் தோற்றம், அதைப் பார்த்துக் கொண்டேயிருக்குமாறு மனத்தை ஈர்த்து நின்றது.

காவிரி சமதரையில் விழும் இடத்தினின்று சற்றுத் தொலைவில் சமதரையில் அதாவது 300 அடி ஆழத்தில், **மின்சார உற்பத்தி நிலையம்** (Electric Generating Station),, கட்டப்பட்டிருக்கிறது. நீர் வீழ்சிக்கு மேற்கே இரண்டு கல் தொலைவில் காவிரியி லிருந்து பிரியுமாறு ஒரு தனிக் கால்வாய் வெட்டப்பட் டிருக்கிறது. அக்கால்வாய் வழியே மின்சார உற்பத்தி நிலையமுள்ள இடம்வரை தண்ணீர் கொண்டு வரப்படு கிறது. காவிரியிலிருந்து கால்வாய் பிரியுமிடத்தில் ஓர் அணை கட்டப்பட்டுத் தண்ணீர் தேக்கப்படுகிறது. இவ்வாறு அணைமூலம் தண்ணீர் தேக்கி வைக் கப்படுதலால், மின்சார உற்பத்தி நிலையம் நோக்கி வரும் கால்வாயில் என்றும் தண்ணீர் குறைவதில்லை. அந்த அணையும் தேக்கமும் மின்சார உற்பத்தி நிலையம் உள்ள இடத்திற்கு ஏறத்தாழ நானூறு அடி உயரத்தில் அமைந்துளவாகலின் கால்வாயில் வரும் நீர் கடுகிப் பாய்ந்தோடி வருகிறது. இவ்விரண்டுக் கல் நீளக் கால்வாயில் இடையிடையே மதகுகள் கட்டப்பட் டுள்ளன. அங்கங்கே நீரின் வேகம் குறைக்கப்பட்டு, மின்சார நிலையம் உள்ள இடத்திற்கு மேலே இருநூற் றைம்பது அடி உயரத்தின் விளிம்பருகில் வன்மையான ஒரு சிற்றணை கட்டப்பட்டுத் தண்ணீர் கீழ்நோக்கி நீர் வீழ்ச்சியாய்ப் பாய்ந்தோடி விடாதபடி தடுக்கப்பட் டிருக்கிறது. அச்சிற்றணையில் பதின்மூன்று கண் ணறைகள் உண்டாக்கி, அவற்றில் பதின்மூன்று இரும் புக்குழைகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. அந்த

இரும்புக்குழைகளுள் ஒவ்வொன்றும் நான்கடிக் குறுக் களவு கொண்டதாகும். சற்றேறத்தாழ 250 அடி உயரமுடையதாகும். அக்குழைகள் மேலேயுள்ள சிற்றணையின் மதகுகளில் பொருத்தப்பட்டுச் செங்குத் தாய் 250 அடி கீழே இறக்கி, மின்சார உற்பத்தி நிலை யத்திற்குள் வைக்கப்பட்டுள்ள மிகப் பெரிய உருளைக ளுடன் இணைக்கப்பட்டுள்ளன. செங்குத்தாய் உள்ள அக்குழைகளின் வழியே கடுவேகத்துடன் பாய்ந்தோடி வரும் தண்ணீர், கீழே மின்சார உற்பத்தி நிலையத்தில் அகன்று குவிந்த முறம் போன்ற பல்சக்கர அமைப் புடன்கூடிய பெரிய உருளைகளில் (Power Generators) மோதி, அவற்றினைக் கடுவேகத்தில் சுழலச் செய்கின்றது. அவ்வாறு விரைந்து உருளைகள் சுழல்வதால் உண்டாகும் சக்தியைக்கொண்டு காந்த சக்தி மின்சாரசக்தியாக மாற்றப்படுகிறது. இந்த மின்சார சக்தியைத் திரட்டவும் பல இடங்களுக்கு அனுப்பவும் அங்கு மாபெரும் பொறிகள் பல பணி யாற்றுகின்றன. இவ்வண்ணம் திரட்டப்படும் மின்சார சக்தி, மேட்டு நிலத்தில் அதாவது 100 அடி உயரத்தில் கட்டப்பட்டுள்ள மற்றொரு மின்சார நிலையத்திற்கு (Power Station) அனுப்பப்பட்டு, அங்கிருந்து மைசூருக்கும், பெங்களூருக்கும், கோலாருக்கும், மற்ற விடங்களுக்குமாகப் பிரித்தனுப்பி வைக்கப்படுகிறது. இம்மின்சார உற்பத்தி நிலையத்தைக் காண முன்ன தாகவே எழுதி இணக்கம் பெறவேண்டும்.

சிவசமுத்திரத்தில் சிற்றுண்டி அருந்திவிட்டு அங் கிருந்து பஸ் மூலம் மத்தூர் மீண்டோம்; வந்தவுடன் வாய்க்காலில் நீராடிக் களித்தோம்; பிறகு உணவருந்தி **மண்டியா நகரம்** செல்ல இரவு புகைவண்டி ஏறினோம்.

மத்தூரிலிருந்து பன்னிரண்டு கல் தொலேவிலுள்ள மண்டியாவுக்கு ஒரு மணி நேரத்தில் போய்ச் சேர்ந்து, புகைவண்டி நிலேயத்தில் படுத்து உறங்கினேம். விடிந்ததும், காலேக் கடன்களே முடித்துப் பசி ஆறியதும், அங்குள்ள **மைசூர் சர்க்கரை ஆலேயைக்** காணச் சென்ருேம்.

மண்டியாவிலுள்ள 'மைசூர் சர்க்கரை ஆலே' இந்தியாவில் இரண்டாவது இடம் வகிக்கும் பெரிய ஆலேயாகும். ஆண்டில் 9 மாதங்கள் சாறு பிழிந்து சர்க்கரை செய்யும் வேலே அங்கே நடைபெறுகிறது. நாள் ஒன்றுக்கு 2000-டன் கரும்பு சாறு பிழியப்படுகிறது. நாலாயிரம் ஆட்கள் அந்த ஆலேயில் வேலே செய்கிருர்கள். அந்த ஆலேக்குச் சொந்தமாக 2600 ஏக்கர் கரும்பு விளேயும் நிலம் மண்டியாவைச் சூழ்ந்திருக்கிறது. ஆனல், அந்த நிலங்களில் விளேயும் கரும்பு சேமிப்பில் வைக்கப்பட்டு, வெளியிடங்களிடமிருந்து கிடைக்காமற் போகும் காலங்களில் மட்டும் பயன்படுத்தப்படுகின்றது.

அந்த ஆலேயைப் பார்ப்பதற்கு முன் கூட்டி இணக்கம் பெற்ருகவேண்டும். அதன் தலேமை அலுவலகம் பெங்களூர் சிட்டி (city) யில் ஸ்ரீ ஜெய சாம ராஜேந்திர தெருவில் இருக்கிறது. அங்குள்ள அவ்வலுவலகத் தலேவரிட மிருந்து இணக்கம் பெறலாம். நாங்கள் சென்னேயிலிருந்தவாறே எழுதி இணக்கம் பெற்ருேம்.

ஆலேயைக் காணச் சென்ற எங்களே அலுவலர்கள் வரவேற்ருர்கள். எங்களிட மிருந்த 'காமிரா'க்களே வாங்கி வைத்துக்கொண்டபின், எங்களே நான்கு குழுவினர்களாகப் பிரித்து ஒவ்வொரு குழுவிற்கும் ஒவ்

வோர் அலுவலர் தலைமை தாங்கி, எங்களை ஆலைக்குள் அழைத்துச் சென்று, சர்க்கரை செய்யப்படும் வகையினை நாங்கள் நன்கு உணரும் வகையில் விளக்கிக் கூறினர்.

வயலிலிருந்து அறுவடை செய்யும் கரும்புகளை அப்படியே கொண்டுவந்து அந்த ஆலையின் ஒருமுனையில் கொட்டினால், மறு முனையில் வந்துவிழும் சர்க்கரை, கோணிகளில் பிடிக்கப்பட்டு மூட்டைகள் ஆக்கப்படுவதைக் கண்டு நாங்கள் பெருவியப்படைந்தோம்.

இந்தப் பிரம்மாண்டமான ஆலையைப் பார்த்து முடித்த பிறகு, பகலுணவு உட்கொண்டு, புகைவண்டியேறி, அங்கிருந்து 19-கல் தொலைவிலிருக்கும் மைசூர் மன்னர்களின் பழைய தலைநகரமாயிருந்த **சீரங்கப் பட்டணம்** போய்ச் சேர்ந்தோம்.

வரலாற்றுப் புகழ்பெற்ற சீரங்கப் பட்டணத்தில் நாங்கள் சத்திரம் ஒன்றை வாடகைக்கு அமர்த்தினோம்; படுக்கை, பெட்டி முதலியவற்றை அங்கு வைத்து விட்டு, திப்புவின் கோட்டையைக் காணச் சென்றோம். அக்கோட்டை மூன்று அகழிகளுடன் மகத்தான அரண்களைக்கொண்டு விளங்கியது. 1792-இல் **காரன்வாலிஸ்** தலைமையில் வந்த வெள்ளையர் படையெடுப்பை எதிர்த்துப் போரிட்டும், 1799-இல் **ஜெனரல் ஹாரிஸ்** தலைமையில் வந்த வெள்ளையர் படையெடுப்பை எதிர்த்துப் போரிட்டும், வெள்ளையரைத் திணறவைத்த அஞ்சா நெஞ்சர், மகா வீரர் திப்புவின் அரண்கள் இன்று சிற்சில சின்னங்களாகவே காட்சி அளித்தன. அங்குள்ள பள்ளிவாயிலின் ஒரு **மினராவின்**(கோபுரம்)

உச்சியில் நின்று பார்க்க, காவிரி இரண்டாகப் பிரிந்து அவ்வூருள்ள இடத்தை அரங்கமாக்குவது நன்ருகத் தெரிந்தது. காவிரியில் அமைந்துள்ள மூன்று அரங்கங்களில் அஃது ஒன்று. மற்ற இரண்டு சிவசமுத்திரத்தில் ஒன்றும் திரிசிராப்பள்ளியின் அருகில் ஒன்றுமாய் அமைந்துள்ளன.

திப்புவின் கொடி மரம், யானைத் தொழுவம் முதலியவற்றைப் பார்த்துக்கொண்டு, **தரியா தெளலத்து** என்னும் எழில் ஒழுகும் கட்டடத்தைக் காணச்சென்ருேம். தரியா தெளலத்து என்பது **'செல்வக் கடல்'** எனப்பொருள்படும். அது ஹைதர் அலியின் சபா மண்டபம் என்பதை அறிந்தோம். பின்னர்த் திப்பு அதைத் தம் வனமாளிகையாகப் பயன்படுத்தினர்.

தரியா தெளலத்து ஓர் அழகிய ஓவியக் கலா நிலையமாகக் காட்சி அளிக்கிறது. எங்கு நோக்கினும் ஓவியங்களும், சிற்ப வேலைப்பாடு நிறைந்த தூண்களும் சுவர்களும் அம்மண்டபத்தின் எழிலைப் பெருக்கிக் காட்டுகின்றன. அம்மண்டபம் கீழ்த்தளம் மேல்தளமென அமைந்திருக்கிறது. கீழ்த்தளம் சுமார் எட்டடி உயரம் இருக்கும். மேல்தளமே சபா மண்டபமாகப் பயன்பட்டிருக்கிறது. நாற்புறமும் அழகிய தாழ்வாரங்களும், மாதர் இருக்கத் தனி அறைகளும் அதில் உள. அந்தத் தாழ்வாரத்தில் ஹைதர் அலி அமர்ந்து வெளி முற்றத்தில் நிற்பவர்களுக்குப் பேட்டி அளிப்பதும் வழக்கு விசாரணைகள் நடத்துவதும் வழக்கமாம். அந்த மண்டபத்தின் தாழ்வாரச் சுவர்களில் முதல் மைசூர்ப் போர், இரண்டாவது மைசூர்ப்போர் முதலியவற்றின் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டு இருக்கின்றன.

தரியா தௌலத்தைப் பார்த்தபின், அங்கிருந்து இரண்டு கல் தொலைவிலுள்ள திப்புவின் சமாதியைப் பார்த்துவிட்டு, அரங்கநாதப்பெருமான் திருக்கோயில் சென்றோம். கி.பி. 894-இல் **திருமலையா** என்பவரால் கட்டப்பட்ட அக்கோயில், அமைதி மிக்க அவ்விடத்தில் அழகுபட விளங்குகின்றது. திருமால் வெளியுலக ஆரவாரம் எதுவும் காதிற்படாமல் அமைதியாகப் பள்ளி கொண்டு உறங்குவது போலவே, கருவறையிலிருந்த மூலவரைக்கண்டபோது எங்கட்குத் தோன்றியது. அரங்கநாதர் திருவடிகளில் **காவிரி அன்னை** அமர்ந்த கோலத்தில் வீற்றிருப்பது போலவும், அருகில் **கௌதம முனிவர்** நின்று வணங்குவது போலவும் அங்கு உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அக்கோவிலில் கல்வெட்டுகள் பல இருக்கின்றன. கி. பி. 1210-இன் தமிழ்க் கல்வெட்டு ஒன்றும் அங்கே காணப்படுகிறது. அந்த ஊருக்குச் சீரங்கப்பட்டணம் என்னும் பெயரிட்டவரும் திருமலையாவே என்பதைத் தெரிந்து கொண்ட பின், அங்கிருந்து நாங்கள் தங்கியிருந்த சத்திரம் சென்று, இரவு உணவருந்தி, பள்ளி கொண்டோம். விடிந்தபின் காவிரிக் கன்னியைக் கண்டோம்; களிப்பு மிகக் கொண்டோம்; நீராடி மகிழ்ந்தோம். பின்னர் ஒன்பது மைல் தொலைவில் உள்ள மைசூரைப் புகை வண்டியின் வாயிலாகச் சென்றடைந்தோம்.

மைசூரை, ‘இந்தியாவின் பூம்பொழில் நகரம்’ எனக் கூறுதல் பொருந்தும். கடல் மட்டத்துக்கு 2525 அடி உயரத்தில் மைசூர் நகரம் அமைந்திருக்கிறது. அந்நகரில் இருநூறுயிரம் மாந்தர் உறைகின்றனர். தெருக்கள் படுபள்ளத்தில் தாழ்ந்தும்

நெடுமேட்டில் ஏறியும் அமைந்துள்ளனவெனினும், எங்கும் பூஞ்சோலைகளும் அழகிய கட்டடங்களும் இருந்து அந்நகரை அழகுபடுத்துகின்றன.

மைசூர் சென்றவுடன், பகல் உணவை முடித்துக் கொண்டு, தலைக்கு மூன்றணுக் கட்டணம் கொடுத்து, **ஜகன்மோகன் மாளிகையி**னுள் சென்றோம். அஃது ஓவியக் கலைக்காட்சி நிலையமாகும். மிக அரிய ஓவியங்கள் அங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டிருக் கின்றன. பழங்கால ஓவியங்கள் பல அங்குள்ளன. உலகிற் சிறந்த ஓவிய அறிஞரால் வரையப்பட்ட அதியற்புத ஓவியங்கள் மனத்தைக் கவர்கின்றன. ஓர் அணங்கு ஒரு கையில் விளக்கொன்றை ஏந்தி அது காற்றில் அணைந்துவிடாமல் மற்றொரு கையால் அதனை மறைத்து எடுத்துவரும் ஓவியம், உயிருள்ள ஓர் அணங்கு விளக்கேற்றிக்கொண்டு வருவதுபோல அத் துணை இயற்கையாகக் காணப்பட்டது. **ராஜா ரவிவர்மா** தம் கையினல் வரைந்த ஓவியங்களையும் அங்கே நாங்கள் பார்த்தோம். ஒன்றை ஒன்று மிஞ்சக்கூடிய வகையில், தமிழ் நாட்டு ஓவியங்களும், வங்காளம், குஜரத்து, பஞ்சாபு, மேனுடுகள் என உலகின் பல நாடுகளின் ஓவியங்களும் அங்குச் சிறப்புற்றுக் காணப்பட்டன.

பழங்கால இசைக் கருவிகளும் அங்குக் காட்சிப் பொருள்களாக்கப்பட்டுள்ளன. செதுக்கு ஓவியங்கள் பலவும் உள்ளன. இவற்றையெல்லாம் கண்ட பிறகு மைசூருக்கு வடமேற்கே பன்னிரண்டு கல் தொலைவி லுள்ள **கண்ணம்பாடி அணை**யைக் காணச் சென்றோம்.

காவிரியாறு சைய **மலையி**னின்று புறப்பட்டு **கனகா, ஹேமாவதி, இலட்சுமண தீர்த்தம்** முதலிய

கிளை யாறுகளுடன் கலந்து வருகையில், **பைரபூர்** என்னு மிடத்திற்கருகில் கண்ணம்பாடி அணை கட்டப்பட்டி ருக்கிறது. இந்த அணையின் சுவர் ஒன்றே முக்காற் கல் நீளமுடையதாகும். இதனால் தடுக்கப்பட்டுக் கடல் போலத் தேங்கும் காவிரித் தேக்கம். 49½ சதுர மைல் பரப்புடையதாகும். இது **கிருஷ்ண ராஜ சாகரம்** என வழங்கப்படுகிறது.

இந்த அணைச் சுவரின் மறுபுறத்தில் **'பிருந்தாவனம்'** எனும் பெயரில், கைபுனைந்தியற்றிய கவின் பெறு வனப்புடையதொரு பூம்பொழில் அமைந்திருக்கிறது. அப்பூங்கா இந்தியாவில் வேறு எங்குமில்லாத எழில் நலங்கள் அனைத்தும் ஒருங்கே வாய்க்கப்பெற்றிருக் கிறது. இயற்கையும் செயற்கையும் கலந்து மனித மூளை அங்கே ஓர் எழிற் கலையை உண்டுபண்ணியிருக் கும் மாண்பை என்னென்றுரைப்பது! வண்ண மலர்ச் செடிகளை வகைப்படுத்தி, காவிரியின் நீரைப் பல சிறு அழகிய பொய்கைகளாகவும், ஏரிகளாகவும், சின்னஞ் சிறு நீர்வீழ்ச்சிகளாகவும் செய்து, ஆங்காங்கே நீர்த் தூம்புகள் நின்று தண்ணீரைக் கண்ணாடிக் கம்பி நின் றிருப்பது போல இடைவிடாது மேல் எழுந்து விழச் செய்து, இராக் காலத்தில் பன்னிற மின்சார விளக்கு களை நீருக்குள் மறைத்துவைத்து, நீரே அப்பன்னிறங் களுடன் விளங்குவது போலத் தோன்றச் செய்து வைத் துள்ள காட்சி கண் கொள்ளாக் காட்சியேயாகும். பிருந் தாவனத்தின் மேற்புறமுள்ள அணையின் சுவரில் காவிரி அம்மையின் கற்சிலையொன்று காட்சி அளிக் கிறது. அவ்வம்மையின் கைகளிற் பற்றியுள்ள சிறு குடத்தின் வாயினின்று நீர்வழிந்து கொண்டிருக்குமாறு அது அமைக்கப் பெற்றுள்ளது. அந்நீர் இடையறாமல்

வழிந்து கொண்டிருக்கும்படி செய்யப்பட்டுள்ள அமைப்பு, **திவான் விசுவேசுவரையாவின்** மூளைத் திறன் என்று கூறப்படுகிறது.

பிருந்தாவனத்தை நாங்கள் கண்டு முடித்த பிறகு, மைசூர் புகைவண்டி நிலையம் திரும்பி, உணவருந்தியதும் மைசூரில் நாங்கள் தங்குவதற்கென அரசாங்கக் கல்வித் துறை அதிகாரி ஒதுக்கிக் கொடுத்திருந்த ஒரு பள்ளிக்கூடம் சென்று அன்றிரவைக் கழித்தோம்.

மறுநாள் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு. **இந்திரபவன்** என்னும் சிற்றுண்டி விடுதியில் பசியாறினோம். மைசூரில் **'போண்டா'** மைசூர் போண்டா எனப்படுகிறதா அல்லது மதராஸ் போண்டா எனப்படுகிறதா என்ற ஐயம் ஒரு மாணவர்க்கு எழ, அங்கும் மைசூர் போண்டா, மைசூர்பாகு, மைசூர் ரசம் என்னும் பெயர்களே வழக்காற்றில் இருக்கின்றன என்பதை அம்மாணவர் கேட்டு அறிந்து கொண்டார்.

பிறகு, தசராவின் பத்தாவது நாள் நடைபெற வேண்டிய மன்னர் உலாவின் ஒத்திகை 9-ஆம் நாட் காலை நடந்தது. அதனை நாங்கள் பார்வையிட்ட பின்னர், பஸ்ஸில் **சாமுண்டிமலைக்குச்** சென்றோம். சாமுண்டிமலை, மைசூர் அரசப் பிரமுகரின் அரண் மனையிலிருந்து தென் கிழக்காக இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. அது கடல் மட்டத்தினின்று 3489 அடி உயரத்தில் இருக்கிறது. அம்மலை மீதேறப் பாறையில் படிகள் வெட்டப்பட்டிருக்கின்றனவென்றாலும், மோட்டார் வண்டியில் செல்வதற்கென அழகிய சாலையும் அமைக்கப் பெற்றுள்ளது.

சாமுண்டிமலைமீது மைசூர் அரச குடும்பத்தினர் வணங்குதற்குரிய **சாமுண்டீசுவரி கோயில்** இருக்கிறது. அக்கோவிலைப் பிற கோவில்களைப் போன்று வைத்திராமல், மிகத் துப்புரவுடையதாக வைத்துக் கொண்டிருக்கின்றனர் அங்குள்ளோர். அக்கோவிலின் பெருங் கதவுகள் எல்லாம் சொக்க வெள்ளியினாலானவை. கருவறையிலுள்ள அம்மனுக்குத் தங்கத் தகட்டால் கவசம் அணிந்திருக்கின்றனர். அக்கோவிலின் வெளிக் கதவு மட்டும் இருநூறாயிரம் ரூபாய் மதிப்புடையது என்பது எங்கட்குக் கூறப்பட்டது. கோவிலுக்குச் சற்றுத் தொலைவில் அரசரின் மாளிகை ஒன்று அழகொழுகக் கட்டப்பட்டிருக்கிறது. அதன் பெயர் **இராஜேந்திர விலாச மாளிகை** என்பதாகும்.

இவற்றையெல்லாம் பார்த்த பிறகு நாங்கள் மலையடி வந்து, நேரே உணவருந்தச் சென்றோம். பிறகு புகழ் வாய்ந்து விளங்கும் '**மைசூர் ஸ்ரீ சாமராஜேந்திர விலங்குக் காட்சிப் பூங்கா**' காணச் சென்றோம். அதனுட் செல்வதற்குக் கட்டணம் நான்கணாவாகும். அப்பூங்காவினுள் சென்னையில் இல்லாத சில விலங்குகள் இருக்கக் கண்டோம். நீர் யானைகள் இரண்டு, வாயைப் பிளந்துகொண்டு வந்து நின்ற காட்சி, காண்பவரை அஞ்ச வைத்தது. அங்கு மனிதக் குரங்கு (Ape man) ஒன்று இருக்கிறது. அக்காட்சி நிலையத்தினர் அதற்குப் பாலும் பழங்களும் அளிக்கின்றனர். அது மனிதரைப் போலவே, ஆரஞ்சுப்பழத்தைத் தோலுரித்துச் சுளை சுளையாகத் தனியே எடுத்து அச்சுளைகளையும் பிரித்துத் தின்னும் காட்சி வேடிக்கையாய் இருந்தது. அப்பூங்காவினுள் வெள்ளை நிற மான்கள், நான்கு பேர் மேலே அமர்ந்து செல்லக்கூடிய அளவு மேலோடு உடைய

மிகப் பெரிய ஆமைகள், காட்டெருமைகள், காட்டு ஆடுகள், பன்னிறங்கள் வாய்ந்த பலவகைக் கிளிகள் முதலியன பார்க்கத்தக்கவைகளாய் இருக்கின்றன.

அதனைப் பார்த்த பிறகு நேரே, மைசூர் மகாராஜாவின் **அரண்மனை** நோக்கிச் சென்றோம். அன்று தசராத் திருவிழாவின் ஒன்பதாம் நாளாகலின், மகாராஜா சிம்மாதனத்தமர்ந்து திருவோலக்கம் நடத்திய காட்சி கண்டோம். அவ்வரண்மனை முழுவதும் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அரசர் தமது அரியணையின்மீது அடியெடுத்து வைத்த உடனே விளக்குகளனைத்தும் பேரொளியுடன் எரியத் தொடங்கும் காட்சியும் மன்னர் அவை முன்னர் மற்போர் முதலியவை நடத்தப்பட்டதும், மன்னர் அறிஞர் பலருக்கு அரியணையிலமர்ந்து பரிசுகள் வழங்கியதும் காண்பதற்கழகாயிருந்தன. இந்த அரண்மனையைத் தசரா அல்லாத சாதாரண காலத்தில் சனி, ஞாயிறுகளில் எவரும் சென்று காணலாம். ஆயின், முன்னதாக அனுமதி பெற்றுகவேண்டும். அரசரின் அரியணைக் காட்சியைப் பார்த்த பிறகு இரவு உணவருந்தி, மனமின்றி மைசூரைப் பிரிந்து, பெங்களூர் மெயில் ஏறி, பெங்களூரை அதிகாலையில் அடைந்து, அங்கிருந்து பெங்களூர் எக்ஸ்பிரஸ் ஏறி 28-ஆந்தேதி பிற்பகல் சென்னை வந்தடைந்தோம்.

---

# 4. வள்ளுவர் வழங்கிய வாயுறை வாழ்த்து

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்று நாம் மகிழ்ந்தேத்தும் வகையில், திருவள்ளுவப் பெருந்தகையார் **திருக்குறளை** வாயுறை வாழ்த்தாக உலக மக்கள் உய்வான் கருதி வழங்கியுள்ளார்.

"வாயுறை வாழ்த்தே வழங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே"

எனத் தொல்காப்பியர் வகுத்த விதிக்கிணங்க, அறியாமையை இடித்துரைத்து அகற்றி உயிர்க்குறுதியும் உடலுக்குரமும் ஊட்டி உலகத்தை உய்விக்க வந்த நூல் என்பதே வாயுறை வாழ்த்து என்பதன் பொருளாகும்.

உலகம் தோன்றிய நாள்முதல் இன்றுவரை, மக்களை நல்வழிப்படுத்த முனைந்த சான்றோர் பலராவர். அவர்கள் மக்களினத்திற்கு அறங்கூற எழுதிய நூல்கள் எண்ணிறந்தன; அவற்றுள் எக்காலத்தவரும் எந்நாட்டினரும் எச்சமயத்தவரும் ஏற்றுக் கொள்ளக் கூடியவாறு அமைந்தவை மிகச் சிலவேயாகும். அவற்றுள் திருக்குறள் எந்நாட்டவர்க்கும், எச்சமயத்தவர்க்கும் எந்நாளும் பயன்படும் அறிவுக் கருவூலமாகத் தனி நின்றுயர்ந்து சிறப்புப் பெற்று, அளக்கலாகாப் பெருமை கொண்டிலங்குகின்றது.

காலம், நாடு, சமயம், குலம் முதலிய பிரிவுகளுக் குட்படாமல், சிறந்த அறிவு ஒழுக்க நெறிமுறைகளைச் சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் எல்லோருக்கும் ஒத்தமுறையில் எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும் அவர்க்கெல்லாம் உரியதாகத் திருக்குறள் தனிச் சிறப்பெய்தித் தலையிடம் பெற்று விளங்குகிறது.

அறம், பொருள், இன்பமாகிய உயிர்க்குறுதி யூட்டும் பொருள்களை மக்களினம் அடைவதற்குரிய நெறியினைத் திருவள்ளுவர் இரண்டடிப் பாவில் புகுத்தி விளங்க வைத்திருக்கும் பண்பினை எண்ணியே 'அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத். தறித்த குறள்' என்றார் ஔவையார்.

**'பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள**
**நூலெல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ'**

என்றார் ஒரு புலவர்.

**'எல்லாப் பொருளும் இதன்பால் உளவிதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லையாற்—சொல்லாற்**
**பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்**
**சுரந்தபா வையத் துணை'**

என மதுரைத்தமிழ் நாகனார் என்பாரும்,

**'எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்**
**செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரு—முப்பாற்கும்**
**பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை**
**நேர்வனமற் றில்லை நிகர்'**

எனப் பாரதம் பாடிய பெருந்தேவனாரும் சிறப்பித் திருக்கும் பாக்கள் திருக்குறளின் பெருமையை விளக்கு வனவாகும்.

தமிழகத்தில் மட்டுமின்றி, உலகெங்கும் மற்றெந் நூலும் எப்புலவரும் அடைந்திராத பெருமையைத் திருக்குறளும் வள்ளுவப் பெருமானும் அடைந்துளர். திருக்குறளையும் அதனாசிரியரையும் பாராட்டிப் போற்றிப் புகழ்ந்து கடைச் சங்கப் புலவர்களனைவரும் பாடிய பாடல்களின் திரட்டு **திருவள்ளுவமாலை** என வழங்கப்படுகிறது.

இங்ஙனம் பண்டைக் காலத்திலும் இக்காலத்திலும் இத்துணைப் பாராட்டுப் பெற்றதாகவும், இன்றளவும் பாராட்டப் பெறுவதாகவும், தனக்குப் பிற்கால நூல்கள் அனைத்திலும் எடுத்தாளப் பெறும் சிறப்புடையதாகவும் விளங்குவது திருக்குறளினும் வேறு நூல் ஏதுமில்லை. திருக்குறளுக்குப்பின் தோன்றிய சங்க நூல்கள், காப்பியங்கள், பிற்கால இலக்கியங்கள் அனைத்திலும் திருக்குறட்பாக் கருத்துக்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன என்பதொன்றே திருக்குறளின் பெருமையை விளக்கப் போதுமானதாகும். திருக்குறளின் காலம் பற்றியோ, திருவள்ளுவப் பெருந்தகையாரின் காலம் பற்றியோ, வாழ்க்கை வரலாறு பற்றியோ விவரம் எதனையும் விளக்கியுரைக்க இயலவில்லை. அவற்றிற்குரிய அகச் சான்றுகளோ புறச்சான்றுகளோ கிடைத்தில.

நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் தொல்காப்பியத்தை அடுத்ததாகத் திருக்குறள் இருத்தல் கூடும் எனக் கருதுகின்றார். துடிசைக்கிழார் அ. சிதம்பரனார் கி. மு. 75 முதல் கி. பி. 36 வரையுள்ள காலம் திருவள்ளுவனார் வாழ்ந்த காலம் எனக் கருதுகின்றார். ஆராய்ச்சித்துறை நண்ணிய சிறந்த தமிழ்ப் புலவர்கள், கிறித்து பிறப்பதற்குச் சற்று முன்னாகவோ, அல்லது

சற்றுப் பின்னுகவோ, ஓரிரண்டு நூற்ருண்டுகளுக் குள்ளாகவே திருக்குறள் வெளிவந்திருத்தல் வேண்டும் என்று கருதுகின்றனர். தொல்காப்பிய நூற்பாவில், "சிறப்பின் ஆகிய பெயர் நிலைக்கிளவிக்கும், இயற் பெயர் கிளவி முற்படக் கிளவார்;" என்பதற்கு உரை கூறி விளக்க வந்த உரையாசிரியருள் முன்னையவரான சேனவரையர், "முனிவன் அகத்தியன், தெய்வப் புலவன் திருவள்ளுவன்" எனச் சான்று காட்டி உள்ள தும் மற்றைய நூற்சான்றுகளும் திருக்குறளின் காலம் தொல்காப்பியத்தை அடுத்தது என்பதையே காட்டும். திருக்குறளின் காலம் கி. பி. 3-ஆம் நூற் ருண்டுக்குப் பிற்பட்டது என்பதும், திருவள்ளுவர் மயிலாப்பூரில் ஆதிக்கும் பகவனுக்கும் பிறந்து வள்ளுவர் மனையில் வாழ்ந்தார் என்பதும், வாசுகி என்னும் வேளாளப் பெண்மணியை மணந்து மயிலாப்பூரில் வாழ்ந்தார் என்பதும், ஏலேல சிங்கர் என்பார் ஆதரவில் நெசவுத்தொழில் செய்து வாழ்ந்தா ரென்பதும், இன்னோரன்ன பிற கதைகளும், அவர் குலம் பற்றிய கதைகளும் பிற்காலத்துத் தோன்றிய ஒரு சிலருடைய கற்பனையே ஆகும். புலவர் புராணம் கபிலரகவல், ஞானமிர்த உரை, திருக்குறள் சிறப்புப் பாயிரங்கள் முதலியனவே இவை போன்ற கதைகளைக் கூறுகின்றன.

வள்ளுவர் பிறந்த இடம் இன்னதென்று துணியக் கூடவில்லை யெனினும், ஊருணி, கேணி எனும் சொற் களைத் திருவள்ளுவர் குறட்பாக்களில் ஆண்டுள்ளமை யால் அவர் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவராயிருத்தல் கூடும்; மதுரையில் பிறந்து வாழ்ந்தவராயிருத்தல் கூடும் என்று கருத இடமேற்படுகிறது. ஊரார்

பயன் படுத்தும் அளவு நீருள்ள நீர் நிலையை ஊருணி யெனவும், ஊற்றெழுந்து நீர் கொண்டுள்ள நீர் நிலையைக் கேணியெனவும் வழங்குவது பாண்டிய நாட்டைத் தவிர மற்றைப் பகுதிகளில் இல்லையாதலான், இவற்றைப் பயன் படுத்தியுள்ள திருவள்ளுவர் பாண்டிய நாட்டவரே என்பது தெளிவாகிறது.

**"உப்பக்க நோக்கி உபகேசி தோள்மணந்தான்**
**உத்தர மாமதுரைக் கச்சென்ப—விப்பக்க**
**மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்**
**போதார் புனற்கூடற் கச்சு"**

எனும் திருவள்ளுவ மாலையிலுள்ள நல்கூர் வேள்வியாரின் கூற்றிலிருந்து திருவள்ளுவர் பிறந்து வாழ்ந்த இடம் மதுரை என அறியக் கிடக்கிறது.

திருக்குறள், தமிழ்ச் செய்யுளினத்தில் முதற்பாவென மதிக்கப்படும் வெண்பாவில் முதல் வகையாகிய குறட்பாக்களால் ஆகிய சிறப்புடையது; "......சிறந்த தென்பவே பாவிற்கு வள்ளுவர் வெண்பா" எனப் புலவர் கவிசாகரப் பெருந்தேவனாரால் சிறப்பிக்கப் பட்டது. குறட்பாவாகவே 1330 பாக்களைக் கொண்ட இதுபோன்ற நூல் வேறு ஒன்றும் தமிழில் இல்லை. திருக்குறள் 12,000 சொற்களைக் கொண்டிருக்கிறது. எனினும், இவற்றுள் 50 சொற்களே வடமொழிச் சார்புடையவை என்று **ரெவரெண்டு டாக்டர் ஜே. லாசரஸ்** கருதுகின்றாரெனினும், பிற ஆராய்ச்சியாளர் அந்த ஐம்பது சொற்களும் தமிழ் மொழியினின்று வடமொழியிற் புகுந்து வடமொழி போலானவை எனக் கூறுகின்றனர். திராவிட ஒப்பிலக்கண நூல் எழுதிய **ரைட் ரெவரண்டு ராபர்ட் கார்டுவெல்** என்னும் பேராசிரியரும் திருக்குறள் வடமொழிக் கலப்பற்ற

தனித் தமிழிலான நூல் என்று கூறியுள்ளார். முதல் வேதமாகிய ரிக்கு வேதத்திலேயே ஏறக்குறைய பன்னிரண்டுக்கு மேற்பட்ட தமிழ்ச் சொற்கள் கலந்திருப்பதாக ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். வடவர்கள் தமிழகம் வந்தபோது அவர்கள் மொழி தமிழிலும், தமிழ் மொழி அவர்தம் மொழியிலும் கலப்புற்றிருப்பது இயற்கையன்றோ? இவ்வண்ணம் இரு மொழிகளிலும் சொற்கள் கலந்திருத்தல் இயல்பாதலின், இச்சொல்லாராய்ச்சி கொண்டு, திருவள்ளுவர் கிறித்து பிறப்பதற்கு முன்னர் வாழ்ந்தவர் என்னும் ஆராய்ச்சியாளர் கூற்று ஏற்கத் தக்கதாயுளது.

திருக்குறள் பல பெயர்களால் வழங்கப்படுகிறது. அறம், பொருள், இன்பம் என மூன்று பால்களாகப் பிரிக்கப்பட்டமையின், **முப்பால்** என்றும், நான்மறைகளுக்கும் மேலான மறையாய் விளங்குதலின் **உத்தர வேதம்** (உத்தரம்—மேற்பட்டது) என்றும், திருவருளால் தோன்றியதாக விளங்குதலின் **தெய்வநூல்** என்றும், கூறுவதனைத்தும்மெய்யேயாதலின் **பொய்யாமொழி** என்றும், அறம் பொருள் இன்பங்களை உறுத்தியுரைத்தல் பற்றி **வாயுறை வாழ்த்து** (வாயுறை—உறுதி மொழி) என்றும், சாவாத் தமிழ் மொழியில் மூவா இளமை வளம் விளங்க நிலவும் அருமறையாக இருத்தல் பற்றித் **தமிழ் மறை** என்றும், எந்நாட்டினரும், எச் சமயத்தினரும், எக்காலத்தவரும் ஏற்றிப் போற்றி ஓதும் பொதுவியல்புடைமை பற்றிப் **பொது மறை** என்றும், திருவள்ளுவரால் இயற்றப்பட்டமையால், ஆசிரியரின் பெருமை கருதி ஆசிரியர் பெயர் மறையாது வழங்கத் **திருவள்ளுவர்** என்றும், பெருமை பொருந்திய குறள் வெண்பாக்களினாலாகிய நூல் என்

பது பற்றித் **திருக்குறள்** என்றும், திருவள்ளுவப் பெருமானரின் ஆழ்ந்த அறிவாற்றல் துய்க்கப் படுதல் பற்றித் **திருவள்ளுவப் பயன்** என்றும், தொல்காப்பியத்திற்கு அடுத்த பண்டை நூலாதலின் **முதுமொழி** என்றும், மூன்றுபால்களாக முறையே வகுக்கப்பட்டமை பற்றி **பான்முறை** என்றும், திருவள்ளுவரால் கூறப்பட்டமை பற்றி **வள்ளுவன் வாய்மொழி, வள்ளுவன் வாய்ச்சொல்** என்றும், புறநானூற்றில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடிய ஆலத்தூர் கிழார் 'அறம் பாடிற்றே ஆயிழை கணவ' எனக் கூறுதலின் **அறம்** என்றும் சிறப்பிக்கப்படுகிறது.

இங்ஙனமே திருவள்ளுவரும் பல பெயர்களால் சிறப்பிக்கப் பட்டுள்ளார். உயிர்க்குறுதிப் பொருள்களாகியவற்றை மக்களினம் உணர்ந்து உய்யச் செய்தமையால் **நாயனர்** என்றும், அறம், பொருள், இன்பம் வீடென்னுமந் நான்கின் திறம் தெரிந்து செப்பியமையால் **தேவர்** என்றும், "புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற், சிலவர் புலவரெனச் செப்பல் நிலவு, பிறங்கொளிமா லைக்கும், பெயர்மாலை மற்றுங், கறங்கிருண் மா லைக்கும் பெயர்" என்னும் செங்குன்றூர்க்கிழார் இயற்றிய செய்யுளுக்கியைய, மற்றெப் புலவரினும் முதல்வராய் விளங்குதலின் **முதற் பாவலன்** என்றும், புலமையில் இறையருள் கமழ்தலின் **தெய்வப் புலவர்** என்றும், "நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன், தான்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த நூன்முறையை, வந்திக்க சென்னி வாய் வாழ்த்துக நன்னெஞ்சம், சிந்திக்க கேட்க செவி" என உக்கிரப் பெருவழுதியாரும் "ஐயாறு நூறுமதிகார மூன்றுமா, மெய்யாய வேதப் பொருள்விளங்

கப் பொய்யாது, தந்தான் உலகிற்குத் தான்வள் ளுவனுகி, அந்தா மரைமேல் அயன்'' எனக் காரிக் கண்ணனுரும் கூறுதலின் **நான்முகன்** என்றும், மக்களி னத்துக்கே தாய்ப்போல விளங்கி முப்பாலைத் தண்ணளி யால் சுரந்தருளினமையால் **மாதானுபங்கி** என்றும், "ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும், பாயிரத்தி னேடு பகர்ந்ததற்பின் போயொருத்தர், வாய்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ, ராய்க் கேட்க வீற்றி ருக்க லாம்'' எனப் புலவர் நத்தத்தனுரும்,

"சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய, வந்த விருவினைக்கு மாமருந்து—முந்திய முந்திய நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனுர் பண்ணிய வின்குறள் வெண் பா'' எனக் கவுணியனுரும் கூறியாங்கு, நாவன் மையுடைமையின் **செந்நாப் போதார்** என்றும் மற்றைப் புலவர்கள் வியப்புற முப்பாலையும் ஒருங்கே கொண்டு தமிழ் வேதம் செய்தருளினமையின் **பெருநாவலர்** என்றும், மதுரைக் கூலவாணிகன் சாத்தனுர் "மணி மேகலை'' என்னும் நூலில் திருவள்ளுவரைப் புகழ் கையில் கூறியவாறு **பொய்யில் புலவர்** என்றும், இன்னும் பலவகையாகவும் திருவள்ளுவப் பெருமான் சிறப்பிக்கப்பட்டுள்ளார்.

திருவள்ளுவர் என்னும் பெயர்க்காரணம் பற்றிப் பலவகைக் கருத்துக்கள் நாட்டில் உலவுகின்றன. அவற்றுள் சில வருமாறு :—

1. சங்க காலத்தில் பாண்டிய நாட்டின் மேற் கெல்லையோரத்தில் இருந்த நாஞ்சில் குன்ற நாட்டினை ஆண்ட குறுநில வேந்தர்க்கு வள்ளுவர் என்பது பெய ராகும். ஔவையார் காலத்தில் அந்நாட்டையாண்ட

மன்னன் பெயர் நாஞ்சில் வள்ளுவன். இக்குறிப்புக் களைக்கொண்டு, திருவள்ளுவர், இந்நாஞ்சில் வள்ளுவனின் மூதாதையாயிருத்தல் கூடுமென்றும், நாஞ்சில் வள்ளுவன் தன் மூதாதையின் பெயரையே தானும் சூடிக்கொண்டிருத்தல் வேண்டும் என்றும் துணியக் கிடக்கிறது. மேலும், மற்றைப் புலவர்களைப் போன்று பிற மன்னர்களின் கொடையை அவாவிய பா ஒன்றேனும் திருவள்ளுவர் நூலில் காணப்படாததும் இக் கருத்தினை வலியுறுத்தும்.

இவ்வாறு அரச குடியினராய் இருந்த வள்ளுவர் பிற்காலத்தில் அரசுரிமை நீங்கினும் தொன்மைச் சிறப்புத் தோன்றக் கோயில் காரியம் பார்த்து வந்தனரென்றும் இச்செய்தி கல்வெட்டுகளால் வலியுறுத்தப்படுகிறதென்றும் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கருதுகிறார்.

பெருங்காப்பிய நூல்களில் ஒன்றான மணிமேகலையில், இந்திரவிழாச் செய்தியை மாநகரத்தார்க்கு அறிவிக்கும் பணியை மேற்கொண்டவன் வள்ளுவனே எனக் குறிப்புளது. "வள்ளுவன் சாக்கையெனும் பெயர் மன்னற் குள்படு கருமத் தலைவர்க் கொன்றும்" என்று திவாகர நூல் தெரிவிக்கின்றது.

**" திருநாள் படைநாள் கடிநாள் என்றிப்**
**பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்**
**செல்வச் சேனை வள்ளுவ முதுமகன் "**

எனப் பெருங்கதை எடுத்தியம்புகின்றது. இவற்றிலிருந்து வள்ளுவர்குடி அரசரைச் சேர்ந்து வாழ்ந்த பெருங்குடி என்பது விளங்குகிறது. எனவே, சங்க காலத்தே குறுநில மன்னராயிருந்த வள்ளுவக்குடியினர் காப்பிய காலத்தே அரசரைச் சார்ந்தும், கோயில்

காரியங்களைக் கவனித்தும் வந்த பெருங்குடி மக்களாயினர் என்பது தெளிவாகிறது.

இது தவிர, கற்பனைக் கதைகளை கருத்துட் கொண்டு, வள்ளுவர் குடியில் வளர்ந்ததனால் இப் பெயர் அமைந்தது என்பாருமுளர்.

வள்ளுவர் என்பது வண்மையுடையவர் எனப் பொருள்படுதலின் நல்வாழ்க்கைக்குரிய நன்னெறி வழங்கியவர் எனும் கருத்துடனிடப்பட்ட காரணப் பெயர் என்பாரும், வளப்பமுடையவர் என்னும் பொருளில் இடப்பட்ட இயற்பெயரே என்பாரும் உளர்.

வட மொழிப் பற்றுடையார் சிலர் ஸ்ரீ வல்லபர் என்னும் வடசொல்லின் திரிபே திருவள்ளுவர் எனக் கூறும் துணிவு கொண்டனர். வல்லபன் என்பது வல்லவன் என்ற தமிழ்ச் சொல்லினின்று திரிந்த வடமொழி என்றும் இது வடசொல் என்பதே தவறான வாதம் என்றும், இதன்பகுதி தமிழேயாதலின் இதுவடமொழியாகாதென்றும், வல்லபன் என்பது வள்ளுவன் என மருவி வருதல் இயலாதென்றும் சொல்லாராய்ச்சி அறிஞர் கூறுகின்றனர்.

வள் என்பது தோல் எனப் பொருள்படுகிறதாதலின் தோல்பற்றிய தொழிலாகிய முரசு அறைபவர் வள்ளுவர் எனப் பெயர் பெற்றனர் என்றும், அப் பெயரே திருவள்ளுவர்க்கும் வழங்கப்பட்டதென்றும் சிலர் கருதுகின்றனர்.

திருவள்ளுவருடைய சமயம் இன்னதென வரையறுக்கக்கூடவில்லை. அவருடைய கடவுள் வாழ்த்துக் குறட்பாக்கள் இறைவனைப் பொதுப்பட வாழ்த்துவன

வாக இருத்தலின், அவர் எச்சமயத்தையும் சாராப் பொது நோக்குடையவர் என்பது பெறப்படுகின்றது.

திருக்குறள், சங்கத் தொகை நூலாகிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும்.

**"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு" ***

என்னும் வெண்பாவினின்று இதனையறியலாம்.

கீழ்க்கணக்கு என்பது குறைந்த அடிகளையுடைய செய்யுட்களினால் அறம் பொருள் இன்பம் என்பவற்றை எடுத்துரைப்பதாகும்.

குறள் என்பது குறுமை என்னும் பண்புப்பெயரேயாகும். இது குறுகிய இரண்டடிப்பாவுக்குப் பெயராகிப் பின் அவ்வகைப் பாட்டுக்களினாலாகிய நூலுக்கும் பெயராகி இருமடியாகு பெயராயிற்று. குறள் என்கையில் இது பாட்டினை உணர்த்தாமல் அவ்வகைப் பாட்டினாலாகிய நூலை உணர்த்துவதால் கருவியாகு பெயராகித் திரு என்னும் அடை அடுத்துவந்து, அடையடுத்த கருவியாகு பெயருமாயிற்று.

---

*1. நாலடியார் 2. நான்மணிக்கடிகை 3. இனியவை நாற்பது 4. இன்னா நாற்பது 5. களவழி நாற்பது 6. கார் நாற்பது 7. ஐந்திணை ஐம்பது 8. ஐந்திணை எழுபது 9. திணைமொழி ஐம்பது 10. திணைமாலை நூற்றைம்பது 11. முப்பால் (திருக்குறள்) 12. திரிகடுகம் 13. ஆசாரக் கோவை 14. பழமொழி 15. சிறுபஞ்சமூலம் 16. முதுமொழிக்காஞ்சி 17. ஏலாதி 18. கைந்நிலை.

திருக்குறள், அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் எனும் மூன்று பிரிவுகளை உடையது. இது பாயிரம், இல்லறவியல், துறவறவியல், பொதுவியல், (அறம்), அரசியல், உறுப்பியல், ஒழிபியல் (பொருள்), களவியல், கற்பியல் (இன்பம், ஆக மூன்று பால்களும் எட்டு இயல்களுமுடையது. இதில், அறத்துப்பால் 38 அதிகாரங்களாகவும் (380 குறட்பாக்கள்), பொருட்பால் 70 அதிகாரங்களாகவும் (700 குறட்பாக்கள்) இன்பத்துப்பால் 25 அதிகாரங்களாகவும் (250 குறட்பாக்கள்) ஆகமொத்தம் 133 அதிகாரங்களாகவும் அதிகாரத்துக்குப் பத்துச் செய்யுட்கள் வீதம் 1330 செய்யுட்களாகவும் அமைந்துள்ளது.

**" தருமர் மணக்குடியர் தாமத்தர் நச்சர்**
**பருதி பரிமே லழகர்—திருமலையர்**
**மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்**
**கெல்லையுரை செய்தா ரிவர் "**

எனும் வெண்பாமூலம் திருக்குறளுக்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பருதி, பரிமேலழகர், திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் எனப் பதின்மர் உரை செய்தனர் என்று தெரிகிறது. இவர்களுள் பரிமேலழகர், மணக்குடவர், காளிங்கர், கவிப்பெருமாள் முதலிய நால்வரின் உரைகள் அச்சாகி வெளிவந்துள்ளன. மற்றையோர் உரைகள் ஏட்டுப்பிரதிகளாகச் சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்திலும், தஞ்சாவூர் 'சரசுவதிமால்' என வழங்கும் நிலையத்திலும் இருக்கின்றன. இவர்கள் தவிர, வள்ளல், சிலைப்பெருமாள், சாத்தர்

**திருக்குறள் - 3 பால்கள்  133 அதிகாரங்கள்  1330 குறட்பாக்கள்**

**அறத்துப்பால்** (38 அதிகா : 380 குறட்பா)

பாயிரம் (4 அதி : 40 பா)

இல்லறவியல் (20 அதி: 200 பா)

துறவறவியல் (13 அதி: 130 பா)

பொதுவியல் (1 அதி : 10 பா)

**பொருட்பால்** (70 அதி : 700 பா)

அரசியல் (25 அதி: 250 பா)

உறுப்பியல் (32 அதி : 320 பா)

ஒழிபியல் (13 அதி: 130 பா)

**இன்பத்துப்பால்** (25 அதி : 250 பா)

களவியல் (7 அதி : 70 பா)

(கற்பியல் 18 அதி : 180 பா)

வழுதி முதலியவர்களும் உரை எழுதியுள்ளனர் என்பது தெரிகிறது.

திருக்குறள் 1730-ல் வீரமாமுனிவரால் [ஜோசப் பெஸ்கி பாதிரியார்] லத்தீன், பிரெஞ்சு, ஜெர்மன், ஆங்கிலம் ஆகிய 4 மொழிகளில் பெயர்க்கப்பட்டது. 1803-இல் ஏ. எப். கான்மரர் என்னும் பெயருடைய ஜெர்மானியர் திருக்குறளைத் தமிழிலிருந்து ஜெர்மானியில் மொழி பெயர்த்தார். 1853-ல் கார்ல் கிரால் என்பவர் மீண்டும் திருக்குறளை ஜெர்மானியில் மொழி பெயர்த்தார். இவர் மொழி பெயர்ப்பே மற்றையவற்றினும் சிறப்புடையதாகும். 1847-இல் பிரடரிக் ரக்காட் என்பார் திருக்குறளை ஜெர்மானியில் கவிதை வடிவத்தில் ஆக்கினர். ஆங்கிலத்தில் திருக்குறளை மொழி பெயர்த்த முதலாசிரியர் ரெவரண்டு ஜி. யூ. போப் அவர்களாவர். ஆங்கிலத்தில் திருக்குறளின் மொழி பெயர்ப்புகள் இன்று பத்துக்கு மேற்பட்டிருக்கின்றன. இவையன்றிக் கிரேக்க மொழியிலும் திருக்குறள் பெயர்க்கப்பட்டிருக்கிறது. இன்று ரஷ்யர்கள் இதனைத் தம் தாய் மொழியில் பெயர்க்க முனைந்துள்ளனர். இவ்வெளிநாட்டு மொழிகளில்லாமல், சமஸ்கிருதம், இந்தி, மலையாளம், தெலுங்கு, கன்னடம், வங்காளி முதலிய இந்திய மொழிகளிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

தமிழர்கள் பண்டைக்குடி மக்கள் என்பதையும், நாகரிகத்தினை உலகிற்குக் கற்பித்த பண்பாடுடையவர் என்பதையும், தமிழ் மொழி ஆதி மொழி என்பதையும் அறியாதோ அறிந்தும் மறைத்தல் விரும்பியோ சிலர் தொல்காப்பியம் போன்ற பண்டைத் தமிழ் நூல்

களுக்கும் வடமொழி மூலம் கற்பிக்க முயல்கின்றனர். இவ்வாறு பொய்யுரை புனைந்து கூறும் புன்மை நாட்டில் பரவி அதற்காளாகிய பலர் திருவள்ளுவர் வரலாற்றில் பொய்க்கதைகள் புனைந்ததுடன் நில்லாமல் திருக்குறள், பர்த்துருஹரி, நீதிசதகம், பகவத்கீதை, மனுஸ்மிருதி, சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம், சுக்கிர நீதி, காமாந்தகம் முதலிய வடமொழி நூல்களின் மொழிபெயர்ப்பென்று கூறவும் துணிந்துவிட்டனர்.

அருங்கலை விநோதரும், உயர்நீதி மன்றத்து வழக்கறிஞரும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவரும் பேராசிரியருமாயிருந்து இப்போது ஓய்வு பெற்றுள்ள நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் M. A., B. L. அவர்கள் திருவள்ளுவரைப் பற்றி, அரிதின் ஆராய்ந்து எழுதியுள்ள **"திருவள்ளுவர்"** எனும் நூலில்," சாணக்கியராதி வடமொழி நீதி வழி நூல்களுக்குப் பின் அவற்றின் சார்பு நூலாக எழுந்த தென்பார், தமது ஆரிய மதிப்பும் காதலும் வெளிப் படுத்துவதன்றிச் சரிதவுண்மை துலக்குபவராகார். தமிழிற் பெருமையுடைய அனைத்தும் ஆரிய நூல் களினின்று திரட்டப்பட்டிருப்பதாகக் காட்டி மகிழ் வார் சிலர்க்கன்றி, நடுநிலையாளருக்கு வள்ளுவர் குறள் தமிழில் தனி முதலற நூலேயா மென்பது வெள்ளிடை மலையாம்" என்று கூறியிருத்தல் தமிழறிந்த ஒவ்வொரு வரும் கவனித்தற்குரியது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர், வித்துவான், சித்தாந்த கலாநிதி, திரு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள், "தமிழ் வாழ்வின் தனிப்பயனாய்த் தோன்றித் தமிழ்ப் புலமை சிறந்து தமிழ் நினைவு தமிழ்ச் செயல்களைத் தமிழுள்ளத்திற் கண்டுரைத்த

தமிழ்த் தனி மகனுரான திருவள்ளுவர், தங்காலத்து வழக்கும் செய்யுளும் ஆகிய இருபெருந் தமிழ்க் கடல் களையும் நுண்மாண்புலமை யென்னும் மத்தினைக் கொண்டு கடைந்தெடுத்த தனிப்பெருந் தமிழமுதம் இத்தண்டமிழ்த் திருக்குறள் என்பது யாவரும் உள்ளக் கிழியில் உருவுபெறப் பொறித்துக்கொள்ள வேண்டிய உண்மையாகும்'' என்று **"தெய்வப் புலவர் திருவள்ளு வர்"** என்னும் தமது ஆராய்ச்சி நூலில் குறித்துள்ளமை உலகம் முற்றிலும் ஏற்றுக வேண்டியதாகும்.

எனவே, திருக்குறள் தமிழில் வெளிப்பட்ட உயர் தனிச்சிறப்புடைய முதல் நூலே என்பதும், போதா யனர், சாணக்கியர் முதலியோர் தோன்றுவதற்கு நெடுங்காலத்திற்கு முற்பட்டவர் திருவள்ளுவர் என் பதும், திருக்குறளே, சிறப்புடைய பல வடமொழி நூல்களுக்கு முதனூலாக அமைந்ததென்பதும் ஆராய்ச்சியாளர் துணிபென்பதும் விளங்கக்கிடக்கிறது. மேலும் வள்ளுவப் பெருமான், வடமொழியாளரின் வழக்கங்கள் பலவற்றைக் கண்டித்திருப்பதற்கு அகச் சான்றுகளுண்மையின், இது தனித்தமிழ் முதனூலே யன்றி வேறந்நூலின் வழிநூலுமன்று என்பது தெளிவாம்.

இவற்றினின்று திருக்குறள் பன்மொழி நூல்கள் பலவற்றினும் மேம்பட்டிருப்பதுடன், உலக அறிஞர் களால் மிக்ச் சிறப்பு வாய்ந்த நூலெனப் போற்றப் பட்டிருக்கின்றமையினலும், தமிழ் மொழியின் மிகப் பண்டைய நூலாயினமையினலும், வாழ்க்கையின் உயர்வுக்கு வேண்டிய எல்லையறு பொருள் அனைத்தும் பொதியப்பெற்றிருக்கின்றமையாலும், துறை பலவும் ஆய்ந்தறிந்து தூய தமிழாற் செய்யப்பட்டுள்ளமையினு

லும், இத்தனித் தமிழ் வளங்கனிந்த திருக்குறள் எனும் கலைக்கருவூலத்தை—அறிவுப் பெருமலையைக் கற்றவரும் மற்றவரும் கருத்துடனே கற்கவேண்டும். திருக்குறள் அறியாத் தமிழர், கல்வி கற்றிருப்பினும், கல்லாதவரேயாகலின், தமிழர் அனைவரும் குறளைப் படித்துணர்ந்து, வாழ்வினைச் செம்மை பெறச் செய்து, நற்றமிழர்களாக விளங்குவார்களாக.

"வள்ளுவர் குறளது விதிநூலெனவே
கொள்ளா மாந்தர் குவலயத்துளரோ".

## 5. தலைமாணுக்கராகும் முறை

'எழுத்தறி வித்தவன் இறைவ ஞகும்' என்பது நம் நாட்டில் வழங்கும் ஒரு முதுமொழி. பெற்ற தாய் தந்தையரை ஒவ்வொருவரும் முன்னறி தெய்வங்களாக வணங்கவேண்டும் என்பதுபோல், கண் எனத்தகும் எண்ணும் எழுத்தும் நமக்குக் கற்பித்துத் தரும் ஆசிரியரையும், இறைவன் என வணங்கவேண்டும் என்பது நம் நாட்டின் மரபு.

மக்கள் ஒவ்வொருவரும் திருந்திய நடைமுறையும், பொருந்திய வாழ்வும் ஒழுக்க உணர்வும் பெற்று வாழ அறிவு இன்றியமையாதது. அந்த அறிவைப் புகட்டி, நடை முறையினைச் செப்பனிட்டு, நல்வாழ்க்கைக் கேற்றவராய் மக்களை ஆக்கி வைப்போர் ஆசிரியப் பணியேற்றுள்ள பெருமக்களேயாவர்.

பள்ளிகள், மக்களை இளமை முதலே செப்பம் செய்து, அறிவு, நல்லொழுக்கம், நன்னடத்தை முதலியவற்றைப் பெற்று வாழுமாறு செய்ய வல்ல தொழிற் சாலைகளாக அமைந்திருக்கின்றன. அத்தொழிற்சாலைகளில், பிள்ளைகளின் போக்கை, மனப்பான்மையை, மதியைச் செப்பம் செய்யும் திறமை மிக்க தொழிலாளராக ஆசிரியர் அமைந்து, அரும் தொண்டாற்றி வருகின்றனர்.

தமிழ் நாட்டில், தங்களை நல்லறிஞராகவும், நன்னெறியாளராகவும், நற்பண்பாளராகவும் ஆக்கி வைக்கும் ஆசிரியரை மிகுந்த அன்புடன் போற்றி வருவது தமிழர்களின் இரத்தத்தில் கலந்த பண்பாகவே இருக்கிறது. தமிழர் தங்கள் இறைவனையும் ஆசிரிய

வடிவத்தில் அமைத்து வணங்குவதில் விருப்பமுடையோர் என்பதைச் சின்முத்திரையுடன் பதுமாசனத்தில் தோற்றமளிக்கும் மூர்த்தங்களைக் கொண்டு அறியலாம்.

இத்துணைச் சிறப்பும் பெருமையும் வாய்ந்த ஆசிரியர் தங்களிடம் கல்வி பெறும் மாணவர் சிறந்த புகழுடனும், அறிவுடனும் பெருமை பெற்று விளங்க வேண்டும் என்னும் ஒரே கருத்துக் கொண்டு பணியாற்றி வருகின்றனர். ஆனால், இக்கால மாணவருள் பெரும்பாலோர் அந்த ஆசிரியர் கருத்து நிறைவேறுமாறு நடந்துகொள்வதில்லை. அதனால் அம்மாணவர் தாங்களும் பலனடையாது, ஆசிரியரின் கருத்தையும் முற்றுப்பெற வைக்காது பாழாகின்றனர்.

ஆசிரியர் தன்னலமற்ற தொண்டு செய்கையில், மாணவர் அவ்வாசிரியர் மாட்டுப் பெற்றோரிடம் கொண்டிருக்கும் அன்பினும் பேரன்புடையோராய், பணிவு மிக்கோராய், நன்றியுடையோராய் நடந்து கொள்ளக் கடமைப்பட்டவராவர். இக்கடனுணர்ந்து ஒழுகாத மாணவர் "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டு; உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகர்க்கு" என்ற திருமறை வாக்கினுக் காளாவர். மாணவர் ஆசிரியரை வழிபட்டு, கற்கும் நெறிபற்றி ஒழுகி நின்று, தங்கள் நல்வாழ்விற்கு இன்றியமையாக் கல்வியைக் கற்றுத் தெளிதல் வேண்டும். மாணவர், நீரைப் பிரித்துப் பாலைமட்டும் உட்கொள்ளும் அன்னம் போல, நல்லவற்றை மனத்துட்கொண்டு, அல்லவற்றை விலக்கி அறிவைப்பெருக்க வேண்டும்; புல்லிருக்கும் இடங்கண்டவுடன் வயிறார மேய்ந்து, பின் தனியிடத்திலிருந்து அசைபோடும் பசுவைப் போலத் தக்க ஆசிரியரைக் கண்டவுடன்

உள்ளம் நிரம்பக் கல்வியறிவைப் பெற்றுப் பின் அதனைச் சிறிது சிறிதாக நினைவிற் கொணர்ந்து சிந்தித்துத் தெளிதல் வேண்டும். இவ்வாறுள்ள மாணவரே தலை மாணுக்கர் எனப்படுவர்.

"கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதோடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்
திருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன ஆர்வத்த ஞகிச்
சித்திரப் பாவையின் அத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள ஞகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்தும்
போவெனப் போதல் என்மனுர் புலவர்."

என்று பவணந்தியார் கூறிய இலக்கணப்படி, ஆசிரியரது குணத்துக்குத் தக்கவாறு பழகி, அவர் குறிப்பறிந்து நடந்து, அவர் இருவென இருந்து, சொல் எனச் சொல்லி, மிக்க தாகமுடையவன் நீரினிடத்துக் கொள்ளும் வேட்கை போலப் பாடங் கேட்பதில் மிக்க விருப்பமுடையவனுய், ஓவியத்தில் எழுதிய பதுமை போல அசைவில்லாமல் அடங்கியிருந்து, செவியை வாயாகவும், நெஞ்சை வயிருகவும் கொண்டு ஆசிரியரிடத்தில் கேட்டவைகளை மறந்துவிடாமல் மனத்தில் பதித்துக் கொள்ளவேண்டும். இதுவே தலைமாணுக்கராய் விளங்க வழியாகும்.

உழவர் உடல் வருந்தி உழைக்கும் அளவுக்குத்தான் நிலம் தன்கண் பலன் காட்டும். அது போல, ஆசிரியர் வருந்திக் கற்பிக்கும் அளவே கல்வியைப் பெறுவதுடன் நின்றுவிடுவோர், வேட்கையுடன் பாடங்கேட்க நாட்டமில்லாதோர், ஆசிரியரின் முயற்சி

யளவே தங்கள் கல்வியறிவைக் காட்டுவோர் நிலத்துக்கு—மண்ணுக்கு—ஒப்பான மாணவர் என்றும், தனக்குக் கற்பித்த சொல்லையல்லாமல் வேறொன்றையும் சொல்லமாட்டாத கிளிக்கு ஒப்பான மாணவர் என்றும் கூறவேண்டும். இத்தகைய மாணவர் இடை மாணாக்கர் எனப்படுவர்.

இவ்வாறின்றிச் இல்லிக்குடத்தில் நீரை வார்த்தால் குடத்தில் ஒரு துளி நீரும் இல்லாமல் ஒழுகி விடுவது போலவும், ஆடு ஒரு செடியின் தழையைத் தன் வயிறு நிரம்புமாறு மேயாமல் பல செடிகளிலும் சென்று கடிக்கும் இயல்பு போலவும், எருமை தெளிந்த நீரையும் கலக்கிக் குடித்தல் போலவும், பன்னாடை சத்தை விட்டுச் சக்கையை மட்டும் நிறுத்திக்கொள்வது போலவும் விளங்கும் மாணவரும் உளர். ஆசிரியரிடம் கேட்பதை அப்போதே மறக்கும் இல்லிக் குடங்களாகவும், ஒரே இடத்தில் தக்கவாறு பயிலாமல், பலரிடத்திற் சிறிது சிறிது கேட்டுப் பயன் பெறுமல் ஆடுகளை ஒத்தும், ஆசிரியரின் நன்மனத்தை வருத்தி, அவர் வெறுப்புடன் கூறும் பாடத்தைக் கேட்டுப் போவதன் மூலம் எருமைகளை ஒத்தும், அறிவு மேம்பாட்டிற்குரியவற்றை விட்டுக் கசடுபோன்றவற்றை மனத்தில் பதிய வைத்துக் கொள்வதன்மூலம் பன்னாடை போலவும் விளங்கும் மாணவர் கடை மாணாக்கர் எனப்படுவர்.

தலை யிடை கடை எனப்படும் இம்மூவகை மாணவர்பற்றி **நன்னூல்** எனும் இலக்கண நூல்,

> **" அன்னம் ஆவே மண்ணொடு கிளியே**
> **இல்லிக் குடமா டெருமை நெய்யரி**
> **அன்னர் தலையிடை கடைமாணாக்கர்."**

என அழகுபட எடுத்துக் கூறியுள்ளது.

இடை, கடை மாணவர்களாக ஆதலை விரும்பு கிறவர் எவரும் இருத்தல் முடியாது. ஆயின், மாண வருலகில் பலர் இடை, கடை மாணவராகவே இருத் தலைக் காண்கின்றோம். இதற்குக் காரணம் மாணவரின் முயற்சியின்மையும் ஊக்கக் குறைவுமேயாகும்.

**" நூல்பயில் இயல்பே நுவலின் வழக்கறிதல்,**<br>
**பாடம் போற்றல், கேட்டவை நினைத்தல்,**<br>
**ஆசான் சார்ந்தவை அமைவரக் கேட்டல்,**<br>
**அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்,**<br>
**வினாதல், வினாயவை விடுத்தல் என்றிவை**<br>
**கடனாக் கொளினே மடநனி இகக்கும். "**

என்னும் இலக்கண விதிக்கொப்ப, மாணவர் முயற்சி யின்மையையும் ஊக்கக் குறைவையும் அகற்றி, கேட்டபாடத்தைப் பலகால் சிந்தித்தலும், ஆசிரியரிடம் தாம் கேட்டவற்றை மீண்டும் மீண்டும் மனத்தில் நினைத்துப் பதிய வைத்தலும், ஆசிரியரையடுத்துப் பாடங்களைக் குறைதீரக் கேட்டலும், நல்லமுறையில் படித்து நல்லொழுக்கத்துடன் விளங்கும் தலைமாணவரா யிருப்பவருடன் பழகுதலும், தமக்கு ஐயமுண்டாகும் பொருள்களை ஆசிரியரிடம் கேட்டு ஐயத்தைப் போக்கிக் கொள்ளுதலும், ஆசிரியர் கேட்கும் கேள்வி களுக்கு அவர் மனங்களிக்குமாறு விடைகூறுதலும் ஆகிய இவற்றை மாணவர் முறையாக மேற்கொள்வா ராயின் அறியாமை நீங்கி அனைவரும் தலை மாணாக்கர் ஆதல் உறுதி.

இவ்வாறு தலை மாணாக்கராதலும் முழுப்பயன் விளைத்து விடுதலில்லை.

**" ஓரிகுறி கேட்போன் இருகாற் கேட்பின்**
**பெருக நூலில் பிழைபா டிலனே."**

என்றாற் போன்று ஒரு நூலை ஒரு முறை பாடங்கேட்பவன் அதே நூலை மீண்டும் ஒருமுறை—அதாவது ஒரே நூலை இரண்டாவது முறையாகப் பாடங் கேட்பானாயின், அந்நூலில் ஐயந்திரிபு கொள்ளுதல் குறையும்.

**" முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும் "**

என்றாற்போல ஒரே நூலை ஒருவன் மூன்று முறை கேட்பானாயின், பிறருக்குச் சொல்ல வேண்டிய முறையை அறிந்து சொல்லுவான்.

**" ஆசான் உரைத்த தமைவரக் கொளினும்**
**காற்கூ றல்லது பற்றலன் ஆகும்**
**அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்**
**செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்**
**மையறு புலமை மாண்புடைத்தாகும்"**

என்றாற் போன்று, ஆசிரியர் கற்பித்தவற்றைத் தலைமாணாக்கனாயிருந்து தன்னறிவினிடத் தமைத்து நிறையக் கற்றானாயினும், புலமைத்திறத்தில் கால்பங்கல்லாது மிகுதியாகப் பெறாதவனாவான்; எனவே, கல்வித்துறை வல்லாருடன் பழகும் வகையால் கால் பங்கும் தன் மாணவருக்கும், பேரவையினருக்கும் கேட்போர் உணர்ந்து மகிழும் வகையில் விரித்துரைத்தலால் அரைப் பங்குமாகக் குற்றமற்ற புலமைத் திறம் நிரம்பியவனாவான்.

ஆகவே குளிருக்காக அனல் காய்பவன் நீங்கிவிடாமலும், நெருங்கிவிடாமலும் இருக்கின்ற நெருப்பைப் போல, ஆசிரியரை நினைத்து அச்சங்கொண்டு நீங்கி

விடாமலும் அசட்டை செய்து அவரை மிகவும் நெருங்கி விடாமலும், ஆசிரியரை நிழலைப் போல்விடாமல் தொடர்ந்து; ஆசிரியர் மனம் மகிழுமாறு நடந்து, அவர் வெறுப்புக்கு ஆளாகாமல் அவரை வழிபட்டு 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே' என்று புறநானூற்றில் கூறப்பட்டிருப்பது போன்று. அறிவைப் பெருக்கிக் கொள்ளுதல் ஒவ்வொரு மாணவரும் மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாக் கடமையாகும்.

எனவே, இவ்வண்ணம் முன்னோர் மொழிந்த முறைகளையறிந்து அவற்றின் வழி நின்று.

**" இன்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்**
**தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்**
**எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்**
**மம்மர் அறுக்கும் மருந்து "**

என்னும் நாலடியினை மனத்தில் பதித்து ஒவ்வொருவரும் கல்வியைக் கசடறக் கற்று, கற்றபின் அதற்குத் தக நின்று செவ்விய வாழ்வு வாழ்வார்களாக.

---

## 6. கடலோடிகள் கண்ட உலகம்

நீராரும் கடலுடுத்த நிலமடந்தையின் சேய்மை நாடுகள் பலவற்றை இன்றுள்ள நாம் அண்மை நாடுகளாகக் கருதுகிறோம். அவற்றின்கண் விளங்கும் மலை, யாறு போன்ற கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்புக்களை எடுத்தியம்புகின்றோம். பதினாயிரங் கற்களுக்குப் புறத்தே உள்ள அமெரிக்கா, ஆறாயிரங் கற்களுக்கு அப்பாலுள்ள ஆங்கிலேய-ஐரோப்பிய நாடுகள், தென் கீழ்க்கோடியிலுள்ள ஆஸ்திரேலியா, நேர் மேற்கில் அணித்தேயுள்ள ஆப்பிரிக்கா, உலகமெனும் கோளத்தின் வடகோடியாம் வடதுருவம், தென்கோடியாம் தென் துருவம் என இவ்வாழி சூழ் உலகின் மூலை முடுக்கையும் விடாமல் வானவூர்தியில் கடுகிச்சென்று அவற்றையெல்லாம் கண்டு வரு வாய்ப்பினை இன்றுள்ள நாம் பெற்றுள்ளோம்.

இவ்வாய்ப்பு நமக்கு விஞ்ஞா ம் அளித்த பேறேயாகும். விஞ்ஞான உதவியால் அச்சேய்மை நாடுகளுக்கு நேரிற் செல்வது மட்டுமின்றி, அங்குள்ளாருடன் நாமிருக்குமிடத்தில் இருந்தவாறே நேருக்கு நேர் பேசவும். 'வானொலி' எனும் கருவியை விஞ்ஞானம் நமக்கு அளித்துள்ளது. இன்று விஞ்ஞானம் உலக முழுவதையும் அண்டை அயல் வீட்டைப் போல ஆக்கி வைத்துள்ளது.

ஆயின், உலகில் இத்துணை நாடுகள் இருக்கின்றன என்பதையும், இவையெல்லாம் கடற்பகுதிகள், இவையெல்லாம் நிலப் பகுதிகள் என்பதையும், இவற்றின் பரப்பளவு இவ்வளவிவ்வளவு என்பதையும் நாம் அறியுமாறு செய்தவர் எவர்? அவர் இவற்றையெல்

லாம் கண்டறிந்தது எங்ஙனம்? அவர் கண்டறிந்த காலம் எது? விஞ்ஞானப்பேறு அம்மக்களுக்குக் கிடைத்ததா? எனும் இவற்றையெல்லாமறிவது இன்றி யமையாததன்றோ! புதிய நாடு காணுதல் எனும் எண்ணம் மனிதஉள்ளத்தில் உண்டாதற்குக் காரணம் உணவேயாம். உணவைத் தேடியும் புதுமைகளைக்காணும் அவா மேலீட்டாலுமே மிகப் பண்டைக் காலத்தில் நாடு காணும் பணியில் மக்கள் துணிந்திறங்கினர்.

கி. மு. 2750 ஆண்டுகளுக்கு முன்னரே **அன்னு** எனும் எகிப்திய இனத்தவர் நீல ஆற்றுப் போக்கினூடே சென்று பல புதிய இடங்களைக் கண்டதுடன், குறுக்கேயுள்ள பாலைநிலத்தைக் கடந்து செங்கடலின் இருப்பை அறிந்து, அதன் தென்புற நாடுகளைப் பற்றிக் குறித்திருந்தார்.

அக்காலத்தில் கிரீட் (மத்திய தரைக் கடல்) தீவில் வாழ்ந்திருந்த **மினோன்** (Minoan) இனத்தவர் எகிப்து நாட்டவருடன் தொடர்பு கொண்டு, சிசிலி, தென் இத்தாலி, ஸ்பெய்ன் முதலிய நாடுகளை அறிந்திருந்தனர். மத்தியதரைக் கடலை அந்தக் காலத்கில் இந்த மினோன் மக்கள் "பெருங் கடல்" (Great Sea) என வழங்கினர். மினோன் இனத்தாரைப் போலவே, அசீரியர், பாபிலோனியர், பொனீசியர் ஆகியோர் கி. மு. 600 ஆண்டுகளுக்கு முன்னரே, ஆபிரிக்காக் கண்டக் கரையோர நாடுகள் பற்றிய தெளிவான விவரம் அறிந்திருந்தனர். **இலியட், ஓடிசி** முதலிய பெருங் காவியங்களை இயற்றிய கிரேக்கப் பெரும் புலவர் **ஹோமர்**, மத்திய தரைக் கடல் நாடுகள் பற்றிய தெளிந்த அறிவுடையவராய் விளங்கினர் என்பதை அவருடைய காவியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

எனினும், ஒழுங்கான முறையில் அறிந்த வரையில் தகுந்த குறிப்புக்களுடன் முதன்முதலாக உலகப் படம் வரைந்தவர் **அணுக்சிமேண்டர்** எனும் கிரேக்கரேயாவர். இது கி. மு. 6-ம் நூற்றுண்டு நிகழ்ச்சி.

கி. மு. 334-ல் பேரரசர் அலெக்சாண்டர் உலக வலம் தொடங்கி, எகிப்தின் தென்புறத்தைக் கைப் பற்றி, **அலெக்சாண்ட்ரியா** எனும் பெயரில் எகிப்தில் கடற்றுறை நகர் ஒன்றை நிறுவி, பாரசீகத்தை வென்று, மத்திய ஆசியாவிற் புகுந்து, பின் இந்தியாவில் சிந்து ஆற்றைக் கடந்து வந்து தாம் வென்ற நாடுகளைப் பற்றிய விவரங்களை யறிந்தார்.

அலெக்ஸாண்டர் இங்ஙனம் உலகவலம் வந்தக் கால், **பிதியஸ்** (Pytheas) எனும் கணித அறிஞர் வாணிபத்தை மேற்கொண்டு வடகடலிற் பயணஞ் செய்தபோது பிரிட்டிஷ் தீவுகளைக் கண்டார். இத் தீவுகள் இருப்பதைக் கண்ட முதல்வர் இவரேயாவர். அலெக்ஸாண்ட்ரியா நிறுவப்பட்ட பின்னர், அங்கமைக்கப்பட்ட பெரும் நூல் நிலையத் தலைவராயிருந்த **இராட்டஸ்தெனஸ்** (Eratosthenes) என்பார், அவர் காலம் வரை அறியப்பட்டிருந்த உண்மைகளைக் கொண்டு உலக படம் ஒன்று வரைந்து வைத்தார். அவருக்குப் பின் உலகபடம் எழுதி உலக விவரங்களைப் பற்றிய விவரங்களைக் குறித்த பேராசிரியர் **டாலமி** என்பவரேயாவர்; இவர் எழுதிய உலக படம் ஆப்ரிக்காவின் தென்பகுதியில் புதிய நாடு இருக்கிறது எனும் அவாவினைப் பிற்காலத்தவருக்குத் தூண்டி விட்டது எனலாம்.

**ஜூலியஸ் சீசர்** கி. மு. 55-ல் பிரிட்டனைக் கைப் பற்றி அந்நாட்டைப் பற்றிய பல விவரங்களைக் குறித்து வைத்தார்.

அப்பண்டைக் காலத்திலே கீழ்க் கோடியில் சீன நாடு ஒரு பெரும் வல்லரசாக வளர்ந்திருந்தது. அந் நாட்டைச்சேர்ந்த **யுவான்-சுவாங்** 629-இல் சீன நாட்டி னின்று புறப்பட்டு, கோபிப் பாலை நிலங் கடந்து, ஆப்கானிஸ்தானம் சென்று அங்கிருந்து கைபர் கணவாய்வழியே இந்தியாவிற்குள் நுழைந்து, இந்நாடு முழுவதும் சுற்றுப் பயணம் செய்தார். இவர் தாம் கண்ட இடங்களைப் பற்றி யெல்லாம் விவரமாகக் குறிப்புக்கள் எழுதி வைத்திருந்தார்.

**நாடொடு** என்னும் நார்வேக்காரரே முதன் முதலாக 874-இல் ஒரு பெரும் பனித் தீவைக் கண்டு அதற்கு **ஐஸ்லாந்து** எனப் பெயரிட்டார். இவ்வூரில் குடியேறியவர்களுள் ஒருவரான **எரிக்** என்பவர், தம் நாட்டவரால் விரட்டப்பட்டு, மரக்கலத்தில் வெளி யேறிச் சென்று கடலில் அலைந்து திரிந்து வடகோடியில் ஒரு பனித்தீவைக் கண்டுபிடித்து, அதற்குக் **'கிரீன் லாந்து'** எனப் பெயரிட்டார்.

இவர்களுக்குப் பிறகு, நாடு காணுவதிலும், புதிய இடங்களைத் தேடிப் பயணஞ்செய்வதிலும் துணிவோடு முனைந்தவர்கள் அரபிகளேயாவர். இவருள்ளும் இப்னு பதூதா என்பார் சிறப்பித்துக் கூறத்தக்கவர். இவர் 1325-இல் **டாஞ்சியர்** எனும் நகரை விட்டுப் புறப்பட்டு ஆசியா கண்டத்தின் பெரும் பகுதிகளையும், ஆபிரிக் காவின் மேற்கு, வடக்குப் பகுதிகளையும் கண்டறிந்தார்.

போர்ச்சுகல் மன்னர் ஜான் என்பாரின் புதல்வர் **ஹென்றி இளவரசர்** பெருங்கடலோடியாய் இருந்து, பல புதிய இடங்களைக் கண்டார். **மடெய்ரா** தீவினை முதன் முதலாக அவரே கண்டார். மற்றவர் நெருங்க அஞ்சியிருந்த மேற்காப்பிரிக்க நாடுகள், அஜோரஸ் தீவு முதலியவற்றைப் போர்ச்சுகீசியரே முதலிற் கண்டனர்.

*1497*-ஆம் ஆண்டில், வடமேற்குக் கடற்பாதை உளதாவென ஆராயும் வேலையில் ஈடுபட்ட **செபாஸ்டியன்** என்னும் ஆங்கில இளைஞர், அதைக் காண முடியாமல், **நியூ பவுண்டுலாந்து**, லப்ரடார் கரை முதலியவற்றைக் கண்டு பிடித்து, அங்கிருந்து இரண்டு எஸ்கிமோக்களைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு இங்கிலாந்து வந்து சேர்ந்தார்.

அதாவது, தென் ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டும், தென் அமெரிக்காவைச் சுற்றிக் கொண்டும் போகும் தென்கடற்பாதை பெரும் தொலையாயிருக்கிறதென்றும், அட்லாண்டிக் கடலையும் பசிபிக் கடலையும் இணைக்கும் வடமேற்குக் கடற்பாதை ஒன்றிருக்க வேண்டுமென்றும், வட அமெரிக்காவைச் சுற்றிக் கொண்டு மேற்காகச் சென்றேனும், ஆசியாவைச் சுற்றிக் கொண்டு கிழக்காகச் சென்றேனும் அதைக் கண்டுபிடித்து விடவேண்டுமென்றும் ஆங்கில நாட்டினர் விரும்பினர்.

*1576*-இல் **ஸர் மார்ட்டின் புரோபிஷர்** என்பார் இம்முயற்சியிலீடுபட்டுப் பயனற்றுத் திரும்பினர். *1583*-இல் **ஸர் ஹம்ப்ரே கில்பர்ட்** வட கடற்பாதையைக் காணச் சென்று செயிண்ட் லாரென்ஸ் குடாக்

கடலில் புகுந்து **கானடா** நாட்டைக் கண்டுபிடித்து அதைப் பிரிட்டிஷ் ஆட்சியில் இணைத்து விட்டுத் தம் நாடு வந்து சேர்ந்து விட்டார்.

1585-இல் **கேப்டன் ஜான் டேவிஸ்** வட கடற் பாதை காண மும்முறை முயன்ருர். வடக்கே இவர் கடந்து சென்ற ஒரு கடலிணைப்புக்கு இவர் பெயரே இன்றும் வழங்கப்படுகிறது.

1610-இல் **ஹென்றி ஹட்சன்** இதற்கென முயன்று இயலாமல் ஹட்சன் விரிகுடாவைக் கண்டுபிடித்தார். அதற்குள் கப்பல்காரர்களிடையே கலகம் தோன்றி இவரும் மற்றும் 7 பேரும் மாண்டனர்.

1611-இல் **ஸர் ஹென்றி பட்டன்** இதே முயற்சியில் இறங்கினரெனினும் பயன் பெறவில்லை. பிறகு **ஜேம்ஸ் ஹால்** முயன்று முடியாமல் சுதேசிகளால் கொல்லப்பட்டார். **வில்லியம் பேப்பின்** முயன்று பேப்பின் விரிகுடாவைக் கண்டார். பிறகு பலர் வட மேற்குக் கடற் பாதையைக் காணும் முயற்சியில் ஈடுபட்டு இயலாமற் போயினர்.

இடையே ஒரு நூற்ருண்டு வரை இம்முயற்சி அடியோடு கைவிடப்பட்ட தெனினும், பிறகு **டாப்ஸ், கேப்டன் மிடில்டன், கேப்டன் ஸ்மித், கேப்டன் மூர்** ஆகியவர்கள் 1741—46 ஆம் ஆண்டுகளில் முயன்று முடியாமற் போயினர். பின் 1773-மே திங்களில் மல்கிரேவ் பிரபு எனப்படும் **கேப்டன் பிப்ஸ்** புறப்பட்டுச் சென்று பயனின்றித் திரும்பினர். இவ்வளவும் முடிந்தபிறகே ஆசியாவைச் சுற்றிச் சென்று பசிபிக்கையும், அட்லாண்டிக்கையும் இணைக்கும் வடகிழக்குக் கடற் பாதை யாவது உண்டா என அறிய **கேப்டன் ஜேம்ஸ்குக்**

முயன்று; அத்தகைய பாதை இல்லை என்னும் முடிவுக்கு வந்தார். கேப்டன் ஜேம்ஸ் குக் வடகிழக்குக் கடற்பாதையை நாடி, வடதுருவக் கடலின் கீழ்த்திசையில் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த அதே சமயத்தில் வடதுருவக் கடலின் மேற்குப் பகுதியில், பர்ரோ முனைக்கு (ரஷ்யாவின் வடகரையில் உள்ளது) அப்பால் 150 மைல் தொலையுள்ள கடற்பகுதியைக் **கேப்டன் பீச்சி** என்பார் ஆராய்ந்து, அப்பகுதி முழுவதும் வெறும் பனிக்கட்டி, பனிப் பாறைகள், பனி மிதப்புகளாகவும், சில சமயங்களில் கடல் முழுவதும் பனி வயலாகவும் காட்சியளிப்பதாக அறிவித்தார். அவருக்குப்பின், **ஸர் ஜான் பிராங்க்ளின், ஸர் இராபர்ட் மக்ளூர், ஸர் ரிச்சர்டு காலின்சன்** முதலியவர்களும் அப்பகுதியில் சில ஆராய்ச்சிகள் நிகழ்த்தினார்கள். எனினும், அட்லாண்டிக் கடலையும், பசிபிக் கடலையும் இணைத்துக் கப்பற் போக்கு வரத்துக்கு வசதியானதொரு கடற்பாதை இல்லையென்பதை முடிவாக அறிவித்து விட்டனர்.

தென் கடலில் பெரியதொரு நிலப்பரப்பு உளதெனக் கருதி, அதைக் காணும் முயற்சியிலும் பலர் முனைந்தனர்.

**மார்க்கோ போலோ** என்னும் இத்தாலி நாட்டினர் 15-ஆம் நூற்றுண்டுத் துவக்கத்தில் சீனு, இந்தியா, இலங்கை முதலிய நாடுகளைச் சுற்றி, உள்நாடுகளில் நெடுந்தொலை பயணஞ்செய்து, பல உண்மைகளைக் கண்டறிந்து, கீழ்ப்பகுதி நாடுகளுடன் வாணிகம் செய்வதற்காக, ஆசியாக் கண்டத்தின் தென் மேற்குப் பகுதியில் ஒரு கடல் வழியைக் கண்டார்.

1487-இல் போர்ச்சிகீசியரான **டையஸ்** என்பார் இந்தியாவுக்கு வர ஒரு வழிகாண விரும்பிப் புறப்பட்டு, ஆப்பிரிக்காவின் தென் கோடியைக் கண்டு, அங்குப் புயல் மிகுதியாயிருந்ததறிந்து, ஆப்பிரிக்காவின் அத்தென்கோடி முனைக்குப் "புயல் முனை" (Stormy Cape) என்று பெயரிட்டு, அதனுடன் தம் நாடு திரும்பிவிட்டார். புயல்முனை என்றால் தம் நாட்டவர் அவ்வழிசெல்ல! அஞ்சுவர் என்றெண்ணிய போர்ச்சுகல் மன்னர் அதற்கு "நன்னம்பிக்கை முனை" (CapeGood Hope) என்று பெயரிட்டார்.

ஜினேவா நகரில் பிறந்த **கிறிஸ்தபர் கொலம்பஸ்** என்னும் பெயருடைய இத்தாலியர், எங்ஙனமேனும் இந்தியாவைக் காணுதல் வேண்டும் என்னும் உறுதி, பூண்டு, 1492 ஆகஸ்ட் திங்களில் புறப்பட்டார். இங்ஙனம் நான்கு முறை இவர் பெருங்கடற் பயணங்களில் ஈடுபட்டு, **சான்சால்வடார் (வாட்லிங் தீவு)** முதலிய தீவுகளைக் கண்டு பிடித்தார்.

1497-இல் **வாஸ்கோடகாமா** என்னும் போர்ச்சுகீஸியர், இந்தியாவைக் காணுவதற்காகப் புறப்பட்டு, "நன்னம்பிக்கை முனை"யைச் சுற்றிக்கொண்டு 11 திங்களில், அதாவது 1498 மே மாதம் **கள்ளிக்கோட்டை** (இந்தியா) வந்து சேர்ந்தார். இரண்டு ஆண்டுகள் வரை இவர் இந்தியாவில் தங்கிய பின், தம் தாய் நாடு திரும்பி, இந்தியாவுக்கும் போர்ச்சுகலுக்கும் இடையே தென் ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டு செல்லும் கடற்பாதை கண்டு பிடித்ததை அறிவித்தார். இவருக்குப் பின் போர்ச்சுகீஸியர் 1505-இல் இலங்கைக்கும், 1511-இல் மலாக்காவுக்கும், 1516-இல் சீனத்துக்கும் 1542-ல் ஜப்பானுக்கும் சென்றனர். தென் சீனத்தில்

1557-இல் அவர்கள் கைப்பற்றிய மக்காவோ எனும் இடம் இன்றளவும் அவர்களுக்கே உரியதாயிருக்கிறது.

1497-இல் அதாவது வாஸ்கோட காமா இந்தியாவுக்கு வரத் தம் நாட்டை விட்டுப் புறப்பட்ட அதே ஆண்டில் இத்தாலியரான **அமெரிக்கோவெஸ்புக்கி** என்பார் கடற் பயணம் புறப்பட்டு அமெரிக்காவின் சில பகுதிகளைக் கண்டறிந்தார். வெனிஜூலா நாட்டிற்கு அப்பெயரிட்டவர் இவரே. வெனிஜூலா என்பதன் பொருள் சிறிய வெனிஸ் என்பதாம். இவரே முதன் முதலாக அப்புதிய கண்டத்தைக் கண்டவராதலின், இவர் பெயராகிய அமெரிக்கோ என்பதே அந்நாட்டிற்கு இடப்பட்டது.

1519-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் மற்ெறாரு போர்ச்சுகீசியரான **பெர்டினண்டு மகலன்** என்பார் புறப்பட்டுத் தென் அமெரிக்காவிலுள்ள பிரேஜில் நாடு, பெடகோனியா நாடு முதலியவற்றைக் கண்டு, பின் தென்கோடிப் பகுதி சென்று, அங்கு ஒரு கடலிணைப்பு இருப்பதையும் அதற்குத் தெற்கே நிலம் பிரிந்திருப்பதையும் கண்டார். அதற்குத் தம் பெயரால் **மகலன் கடலிணைப்பு** என்று பெயர் சூட்டிப் பின், மேற்கே புதியதொரு கடலைக் கண்டு அதில் 113 நாட்கள் வரை வடமேற்காகச் சென்று, லாட்ரோன்ஸ், பிலிப்பைன்ஸ்தீவுகளையும், மற்றும் பலசிறு தீவுகளையும் கண்டார்: அக்கடல் கொந்தளிப்பற்று இருந்ததால் அதற்குப் **பஸிபிக் கடல்** (அமைதியான கடல்) என்று பெயரிட்டார். இவர் பிலிப்பைன்ஸ் தீவுகளை விட்டுப் புறப்படு முன்னரே நோய்வாய்ப்பட்டு இறந்தார். இவருடன் சென்றவர்கள் மீள்கையில், மிண்டானோ

பாலாவன், டெர்னேட், போர்னியோ தீவுகளைக் கண்டு, ஆங்கெல்லாம் விளையும் இலவங்கம், சாதிக்காய், ஏலக்காய் முதலிய நறுமணப் பொருள்களையும், கற்பூர மரத்தையும் விரும்பி, அவற்றுள் சிலவற்றுடன் 1522 செப்டம்பரில் திரும்பினர். உலகை முதன் முதலாக வட்டமாகச் சுற்றி வந்தவர்கள் இவர்களே. இதன் பிறகு தான் உலகம் தட்டையாயிருந்ததென்று எண்ணியிருந்த அறிஞர்கள் உலகின் உருவம் உருண்டை என்பதை உணர்ந்துகொண்டனர்.

1524-இல் பனமாவில் குடியேறியிருந்த **பிரான்ஸிஸ்கோ பிசாரோ** என்னும் ஸ்பானியர், கப்பல் தலைவரான **பல்போவா** என்பாரின் உதவி பெற்று முத்துத் தீவுகள்; பெருவியா நாடு,கார்கோனுத் தீவுகள் முதலியவற்றைக் கண்டுபிடித்தார்.

1567-இல் **அல்வெரஸ் டி மெண்டாமோ** என்னும் ஸ்பானியர், பெரு நாட்டின் கடற்கரையிலிருந்து (தென் அமெரிக்காவின் மேற்குப் புறத்திலுள்ளது) மேற்காகப் பசிபிக் கடலில் நெடுந்தொலை சென்று **செயிண் கிறிஸ்தோபர்** தீவுக் குழுவினைக் கண்டார். அத்தீவுக் குழு 33 தீவுகளைக் கொண்டதாம்.

1577-இல் **பிரான்ஸிஸ் டிரேக்** என்னும் ஆங்கிலேயர், மகலன் கடலிணைப்பு வழியே சென்று இப்போது காலிபோர்னியா (வட அமெரிக்காவின் மேற்குப் பகுதி) எனப்படும் நிலப்பகுதியைக் கண்டு, அதற்கு **நியூ-ஆல்பியன்** என்று பெயரிட்டார். வழியில் இவர் பல சிறு தீவுகளையும் கண்டுபிடித்தார்.

1580-இல் **ஸர் தாமஸ் காவண்டிஷ்** என்பார் இதே வழியாகச் சென்று, பிலிப்பைன்ஸ் தீவுகளில் தங்கி

யிருந்து, பின் தம் நாடு திரும்பியதும் அப்பாதை பற்றிய பல விவரங்களை அறிவித்தார்.

1599-இல் **அல்வாரோ மெண்டானு டி நெய்ரா** என்னும் ஸ்பானியர் பசிபிக் கடலில் பயணம் செய்து, மார்க்குவஸ் தீவுகள், சாலிட்டரி தீவு, சண்ட்டா குரூஸ் தீவு முதலியவைகளைக் கண்டார்.

இவ்வண்ணம் உலக நாடுகள் பற்றிய பல உண்மைகள், பல அறிஞர்களால், துணிவுமிக்க கடலோடிகளால் அவ்வப்போது காணப்பட்டன. இன்று நாம் ஒரு படத்தின் மூலமாக அவ்வளவு நாடுகளையும் பற்றிய விவரங்களை ஓரிடத்திலிருந்த வண்ணம் அறிகிறோமெனில், அப்பெரியார்களின் உழைப்பும் தியாகமுமே அதற்குக் காரணம். அவர்தம் ஊக்கமும் விடா முயற்சியும் இடையறு உழைப்பும் துணிவும் நம் நாட்டவர் உள்ளத்தை ஊக்குவிக்குமாக.

———

# 7. பத்தினி விழா

(நாடகம்)

## அங்கம் 1

### காட்சி 1

**இடம்:**—மலைச்சாரல், செங்குட்டுவன் முகாம்.

**காலம்:**—மாலை.

**உறுப்பினர்:**—சேரன், அவன் மனைவி வேண்மாள், சாத்தனார், இளங்கோ, படைவீரர், வில்லவன் கோதை, அழும்பில்வேள், குன்றக் குறவர்.

[செங்குட்டுவன் முகாம் எதிரில் அமர்ந்துள்ளான். வில்லவன் கோதை, அழும்பில்வேள் முதலியோரும் அமர்ந்துள்ளனர். குன்றக் குறவர் ஒரு புறம் நிற்கின்றனர். புலவர்கள் இருவரும் ஒருசேர அமர்ந்துள்ளனர். குன்றக் குறவர் கண்ணகியின் செய்தி கூறிய பின்,]

**"தமிழ் வாழ்க! செந்தமிழ் வாழ்க! தமிழகம் வாழ்க! எங்கோ வாழ்க! சேரர் பெருமான் வாழ்க!"**

[என்று குன்றக் குறவர்களுள் ஒருவர் கூற, அனைவரும் பின்பற்றிப் பேரொலி எழுப்புகின்றனர்.]

**செங்குட்டுவன்:**—மலை வாழ் பெரு மக்களே! உங்கள் அன்புக்கு எம் நன்றி. நீங்கள் எமக்தளித்த தந்தம், அகில், மான்கவரி, தேன் குடங்கள், சந்தனம், சிந்தூரம், நீலக்கல், அஞ்சனக்கல், கத்தூரி, ஏலம், மிளகு, கூவை, கவலைக் கிழங்குகள், முக்கனி, கரும்பு, வெள்ளுள்ளி, கமுகு முதலியவற்றையும், மான், குரங்கு, கரடி, யானை, சிங்கம், புலி, ஆளி முதலியவற்றின் குட்டிகளையும், மயில், காட்டுக்

கோழி, கிளி முதலிய பறவைகளையும் இன்பத துடன் ஏற்றோம். உங்களுக்கு எம் நன்றி.

(ஒரு விநாடி நிறுத்தி)

என்ன வியப்பு! பெண் ஒருத்தி விரிந்த கூந்த லுடன், இம்மலைமீது-நம் நாட்டின் மலைமீது வந்து நின்றனளாம். விமானத்தில் விண்ணகம் சென்றன ளாம். குன்றக் குறவர் கூறிய இந்நிகழ்ச்சி மிக வியப்பானது! (சற்று நிறுத்தி) அவள் யார் மகளோ! எந்நாட்டினளோ! அறிய முடிய வில்லையே!

**மதுரைக் கூலவாணிகன் சாத்தனார்** :—அரசர்க்கரசே, வாழ்க! அப்பெண் வரலாற்றை யான் அறிவேன்.

**செங்** :—கூறுக! கூறுக!

**மற்றையோர்** :—கூறுக புலவரே கூறுக!

**சாத்** :—வாழ்க அரசே! வாழ்க நின்கொற்றம்! அப் பெண் சோழ நாட்டைச் சேர்ந்தவள்; செல்வம் கொழித்த ஒரு வணிகர் மகள். தன்னோடுஒத்த குண நலன்களும் செல்வவளப்பமும் வாய்ந்த கோவலனை அப்பெண் மணந்து சில காலம் இன்ப வாழ்க்கை நடத்தினள். பிறகு, கோவலன் ஆடலழகியாம் மாதவியிடம் அன்புகொண்டு தன் செல்வத்தை இழந்தான்; பாண்டிய நாட்டில் வாணிகம் செய்து பொருளீட்ட நாடினான். தன் மனைவி கண்ணகி யுடன் மதுரை சேர்ந்து கண்ணகியின் காற்சிலம் பொன்றை விற்றுப் பணமாக்க முயன்றான்; மது ரையில் பாண்டியன் நெடுஞ்செழியனுடைய பொற் கொல்லன் செய்த சூழ்ச்சியால், கள்வன் எனக் கரு தப்பட்டுக் கொல்லப்பட்டார்.

கண்ணகி தன் கணவன் கள்வனல்லன் என் பதைப் பாண்டியன் முன் மெய்ப்பித்தாள். பாண்டியன் தான் நீதி தவறியதை அறிந்து உடனே உயிர் நீத்தான். அவன் மனைவி கோப்பெருந் தேவியும் கணவனுடன் மாண்டாள். பின் கோபத்தால் மதுரை எரியுமாறு செய்த கண்ணகி நேரே இங்கு வந்து, இம்மலைமீது நின்று விண்ணகம் சென்றாள்.

**செங்கு** :—புலவர்பெருமானே! கண்ணகி வீரச் செல்வி. பாண்டியன் அறம் தவறினான். அவன் செங்கோல் வளைந்தது. எனினும், அவன் தன்னுயிரைக் கொடுத்து நீதியை நிலை நிறுத்தினான். மன்னனாகப்பிறப்பதே துன்பந்தருவதுதான். நாட்டில் மழை பெய்யாமல் இருப்பதோ, மக்கள் வேறு பல துன்பங்கள் அடைவதோ ஆட்சி முறையின் சீர் கேட்டால்தான். எனவே, மக்களுக்கு எத்துன்பம் நேரினும் உடனுக்குடனே அதை அகற்றாவிடில் அவ்வாட்சி கொடுங்கோலாட்சியாகும். இத் தகைய ஆட்சிப் பொறுப்பேற்கும் மன்னர்பிறவி, துன்பந் தருவதே ஆகும். (சற்று நிறுத்தி, அருகில் நின்ற தன் மனைவியை நோக்கி) வேண்மாள்! குன்றக் குறவர் கூற்றைக் கேட்டனையன்றோ? கணவனுடன் உயிர் நீத்த கோப்பெருந்தேவி, கணவனைக் கொல்வித்த பாண்டியனிடம் பழிக்குப் பழிவாங்கிப் பின் நம்நாடு வந்தகண்ணகி, இவ்விருவருள் சிறந்தவர் யார்?

**தேவி** :—தலைவரே! கணவனுடன் உயிர் நீத்த பத்தினி கோப்பெருந்தேவி சிறந்தவரே! ஆயின் நம் நாடு

வந்து நம்மைச் சிறப்பித்த பத்தினியாம் கண்ண கியை நாம் பரசல் வேண்டும்.

**செங் :**—ஆம், வேண்மாள்! நின் கருத்து சாலச் சிறந்ததே. நம் நாடு வந்து நம்மைப் பெருமைப் படுத்திய இப்பத்தினிக்குக் கல் எடுத்துப் படிவம் செதுக்கி விழாச் செய்வோம்.

**படைவீரர்கள் :**—பத்தினிக்குப் படிவம் செதுக்க, இமயத்திலிருந்து கல் எடுக்கலாம்; அதனைக் கங் கையில் நீராட்ட வேண்டும். இல்லையென்றால் பொதிய மலையில் கல் எடுக்கலாம். அதனைக் காவிரியில் நீராட்டல் வேண்டும்.

**செங் :**—நல்ல கருத்து. பொதியத்திலிருந்து கல் எடுத் துக் காவிரியில் நீராட்டுவது எம்போன்ற மன்னர்க் குப் பெருமையன்று; இமயத்தினின்று கல் கொணர்ந்து, கங்கையில் நீராட்டலே சிறந்த செயலாகும்.

**படைவீரர்கள் :**—ஆம், பெருமானே!

**வில்லவன் :**—பெருமானே! எம் பெருமாட்டியாகிய தங்கள் அன்னையார் படிவத்தையும் நாம் கங்கை யில் நீராட்டியுள்ளோம். அவ்வண்ணமே இப் போதும் செய்யலாம்.

**செங் :**—நாம் இமயம் செல்லவேண்டும் என்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அங்கே வடவாரிய மன்னர் இருவர், கனகர், விசயர் என்பார் தமிழ கத்தை இழித்துப் பேசினராம்; முடியுடை மூவேந் தரின் வீரத்தைப் பழித்தனராம். தமிழர்களின் மறப்பண்பை உணராமல் துள்ளிக் குதித்தன னராம்.

**வில்ல:**—தமிழர் தோள்வலி அறியாத் தான்தோன்றிகள்.

**செங்:**—என் தந்தையார் இமயம் சென்று விற்கொடி பொறித்தபோது இவர்கள் பிறந்தில்லை. இவர் தம் முன்னோர் கோழைகளாயினர். யாம் முன்னர் எம் நற்றாயின் படிவத்தைக் கங்கையில் நீராட்ட வடநாடு சென்றிருந்த போது, இப்புல்லர் இருந்த இடம் தெரியாமல் பதுங்கினர்.

**வில்:**—அப்போது நடந்த போரில் தாங்கள் சிங்கம் போன்ற நிற்க, வடவாரிய அரசர் அத்துணைப் பேரும் கூடி நின்றனரே! எதிர்க்க ஆற்றலற்று ஓடினரே! அவர் ஓட்டத்தை நம் வீரர்கள் பிடிக்க முடியாமற் போயிற்றே! அதை மறந்தனரோ அவர்கள்! சிங்கத்தின் குகையை எட்டிப் பார்க்க எண்ணும் சிறு நரிகள்! வாய்ப் பேச்சில் வீரம் பேசுப் வீணர்கள்! மறப்பண்பற்றுப் புறம் பேசித் திரியும் புல்லர்கள்!

**செங்:**—ஆம்! அன்று தமிழர் படை முன் நிற்க ஆற்றலற்றுத் தலைகுனிந்தனர். யாம் தமிழரின் வீரத்தை - உயர் பண்பை - அன்று அவர்களுக்கு எடுத்துக் காட்டினோம்; இன்று நாம் இல்லாவிடத்துப் புறம் பேசித் திரியும் அப்புல்லர்கள் செருக்கை அடக்க வேண்டும். அதற்கென்றே நாம் இமயம் சென்று பத்தினிப் படிவம் சமைக்கக் கல் கொணர வேண்டும்.

**படைவீரர்:**—மன்னர் பெருமானே! இன்றே செல்வோம்; தமிழரைப் பழித்த நாத்தடிப்பைத்துண்டிப்போம்.

**வில்ல:**—வடவர்தம் செருக்கை அடக்குதல் வேண்டும்.

**செங்:**—அக்கசடர்தம் தலைகள் பத்தினிப் படிவக்கல் லைச் சுமக்கச் செய்வோம்; தமிழகப் பெருமையினை உணரச் செய்வோம்; சேர, சோழ, பாண்டியர் வீரத்தில் நிகரற்றவர் என்பதை மெய்ப்பிப்போம்.

**அனைவரும்:**—இன்றே செல்வோம் இமயத்தை நோக்கி!

**அழும்பில்வேள்:**—மன்னர் மன்ன! நாம் வடநாடு ஏகும் செய்தியை நம் தலைநகராம் வாஞ்சிமா நகரில் முர சறைந்து தெரிவிப்போம். நம் நகரில் உள்ள வட நாட்டு ஒற்றர் இச்செய்தியைத் தத்தம் மன்னர் களுக்கு அறிவிப்பர். இதற்கெனத் தனித்தனி ஓலை போக்க வேண்டாம்.

**செங்:**—இல்லை; ஓலை போக்குங்கள்; நாம் படை எடுத்து வருகிறோம் என்பதை அவர்கள் முன்னர் அறியட் டும்; படைகளைப் பெருக்கி, நம்மை எதிர்த்து நிற்கத் தம் ஆற்றலை மிகுத்துக் கொள்ளட்டும்.

**வீரர்:**—வாழ்க எங்கோ! வாழ்க எம் கோப்பெருந் தேவி! வாழ்க தமிழர்! (அனைவரும் வஞ்சி நகர் நோக்கிச் செல்கின்றனர்.)

## அங்கம் 2

### காட்சி 1

**இடம்:**—ஒரு தெரு.

**காலம்:**—மாலை.

**உறுப்பினர்:**—வழிபோக்கர் சிலர்.

[தெருவோரம் நின்று வீரம் விளங்குமாறு பேசுகின் றனர்.]

**ஒருவன்:**—அண்ணே! வடவர் நம்மைப் பழித்தனராமே!

**மற்றவன்:**—கேட்டேன் தம்பி அக்கடு மொழியை! விடு வதா அவரைச் சும்மா! பழித்தவரைப் பழிவாங்க வேண்டாவா!

**இன்னொருவன்:**—நாடு கொதிக்கிற தண்ணே! வீரத் தமிழர் நாம் இங்கிருக்க, நம்மைச் சில கோழைகள் புறத்தே இகழ்வதா? அதைக் கேட்டும் நாம் சும்மா இருப்பதா?

**மற்றவன்:**—கேட்டவுடன் போருக் கெழவேண்டும் அண்ணே! தாமதம் சற்றும் தகாது.

**ஒருவன்:**—வடவர் வீரம் மிக்கவரோ அண்ணே? நம் மைப் போல் போர்ப் பயிற்சி உடையரோ?

**முதியவன் ஒருவன்:**—ஆம் தம்பி; அவர்கள் வீரத்தைக் கூறுகிறேன் கேள். ஒருவன் ஓர் அம்பை எடுத்து எய்தால், அஃது உயிர்களையெல்லாம் கவர்ந்து விடும். பிறகு எங்கேனும் வேறு உயிர்களிருக்கின்ற னவாவென்று தேடும். இல்லாவிடின் கடலிற் சென்று குளித்துத் தலை முழுகிவிட்டு மீண்டும் விட்டவனிடம் வந்து சேரும்.

**மற்றவன்:**—அது மட்டுமா அண்ணே! நேருக்கு நேர் போர் செய்யாமல் மறைந்து நின்று அம்பெய்வதும் அவர்கள் வீரந்தான்.

**இன்னொருவன்:**—ஊஹூம். அவர்கள் எல்லோரும் தட் டிக் கேட்க ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப் பிரசண்டன் என்பது போல, ஆள் இல்லாத விடத்து ஆரவாரம் செய்வர். பகைவர் படை யெடுத்து வந்து விட்டனர் என்று கேட்டால் காற் றில் அகப்பட்ட பஞ்சையும் பறப்பதில் மிஞ்சிவிடு வரப்பா!

**முதியவன்:**—வெறும் பேச்சில் பயனில்லை; செயலில் காட்ட வேண்டும். புறப்படுங்கள் போருக்கு!

(அனைவரும் போகின்றனர்.)

## அங்கம் 3

### காட்சி 1

**இடம்:**—நீல மலைச்சாரல்.

**காலம்:**—காலை.

**உறுப்பினர்:**—வில்லவன்கோதை, அழும்பில்வேள், படைவீரர்.

**வில்லவன்:**—ஆ! ஆ! என்ன அழகு! இயற்கை அன்னையின் வனப்பைப் பார்! இவ்வைகறை நேரத்தில் இந் நீல மலைக் காட்சி, உள்ளத்தைக் கவருகிறது! அந்தச் சிற்ருறு பாயும் காட்சியைப் பார். கற்புடைத் தமிழ் மங்கை ஒருத்தி நாணிச்செல்வது போலன்றோ காண்கிறது!

**அழும்பில்வேள்:**—அதோ பார்! மான் குட்டிகள் துள்ளி விளையாடுவதை! மரத்தின்மீது குயில்கள் பாடுவதை! குளத்திலே தாமரைகள் மலர்ந்து நிற்க, அப் பச்சை இலைகளில் ஒரு பெரிய இலைமீது அமர்ந்திருப்பது போலக் காணப்படும் அன்னத்தைப் பார்! அந்த மயிலைப் பார்! அது தன் தோகையை விரித்தாடும் அழகை என்னென்பது! அந்தக் காட்டுக் கோழிகளின் ஒலி, முழவொலி போலில்லையா!

**வில்லவன்:**—ஆம், ஆம்! இயற்கையழகு இங்கு ஆட்சி புரிகின்றது. குளமாகிய தாமரை மண்டபத்திலே

அரசியாகிய அன்னம் தாமரையிலையாம் அரியாசனத்தில் அமர்ந்திருக்கிறது. அந்த அரசவையில் குயில்கள் பாட, கானக்கோழிகள் மத்தளம் அடிக்க, மயில்கள் ஆடல் நிகழ்த்துகின்றன.

**ஒருவீரன்:**—அதோ பார்! மான்கள் குரவைக் கூத்தாடுகின்றன. இந்த அரசவைக் காட்சியைக் குரங்குகள் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

**மற்றவன்:**—சரிதானப்பா! நேற்று மாலையே இந்த நீல மலைக்கு வந்துவிட்டோம். இன்னும் புறப்படவில்லையே! என் கைகள் போருக்கென அரிப்பெடுக்கின்றன.

**இன்னொருவீரன்:**—அதிருக்கட்டும். எவரோ வடநாட்டவர் ஒருவர் நம் சேரர் பெருமானைப் பார்க்க வந்திருக்கின்றார். அவருடன் பற்பல வரிசைகளுடன், வீரர் பலரும் வந்துள்ளனர். இவர்கள் வந்த வரலாற்றைக் கேட்டறிந்த பிறகே, நம் மன்னர் இவ்விடத்தை விட்டும் புறப்படுவார் போலத் தோன்றுகிறது.

**மற்றவன்:**—வந்தவர் யாரோ ?

**இன்:**—நம் மன்னர் சீற்றத்தைத் தணிக்க வந்த தூதுவனோ !

**மற்:**—அன்றி ஏதேனும் வஞ்சக நோக்குடன் வந்தனனோ!

**அழும்பில்வேள்:**—இல்லை யில்லை; வந்திருக்கும் வடவர் நம் சேரர் பெருமானின் நட்பைப்பெற்ற நூற்றுவர் கன்னர் என்பாரின் அமைச்சர். **சஞ்சயன்** என்பது அவர் பெயராகும். நாம் வடநாடு

நோக்கிப் போவதால் நமக்கு ஆதரவு நல்கவும் வழியில் நமக்கு வேண்டுவன ஆயத்தம் செய்து வைக்கவும், தங்கள் நட்பினை அறிவித்துப் போகவும் தூதாக வந்தவரே. நம் பெருமானுக் குத் தங்கள் பணிவினையும், அன்பினையும், நட் பினையும் அறிவிக்கவே பற்பல வகையான பரிசில் களுடன் வந்துள்ளனர்.

**மற்றையோர் :**... இவ்வளவு தானு; சரி அனைவரும் புறப்பட ஆயத்தமாவோம்! வாருங்கள்.

## காட்சி 2

**இடம் :**—செங்குட்டுவன் பாசறைக்கு வெளியே.

**காலம் :**—மாலை.

**உறுப்பினர் :**—செங்குட்டுவன், வில்லவன்கோதை. சஞ்ச யன், ஆடல் மகளிர் இருவர், துணை இசைக்காரர்கள், வாயிற் காவலர்.

[செங்குட்டுவன் பாசறைக்கு வெளியில் ஓர் இருக் கையில் அமர்ந்துள்ளான். வில்லவன்கோதை ஒரு புறம் கையில் நீண்ட வேலுடன் நிற்கிருன். சஞ் சயன் பணிவோடு நிற்கிருன். ஆடல் மகளிர் ஆடு கின்றனர்; துணைவர் இசை முழங்குகின்றனர். இரு புறங்களிலும் காவலர் இருவர் நிற்கின்றனர்.]

**செங்குட்டுவன்:**—அழகு! மிக அழகு! ஆடல் இலக் கணம் சற்றும் பிறழவில்லை. சஞ்சயரே! உங்கள் நாட்டு ஆடலும், அதற்கிசைந்த பாடலும் மிகவும் அருமையாயிருக்கின்றன. இம்மங்கையர் நன்கு ஆடி னர்; இக்கலை வளர்வதாகுக. (பரிசளிக்கின்ருன். பின் அப்பெண்களை நோக்கி) "நீங்கள் இனிப் போகலாம்." (பின் சஞ்சயனை நோக்கி) யாம் வட

நாடு வருகின்றோம் என்பதை அறிந்து, இதற்குள் இந்நெடுந் தொலை கடந்து வந்துவிட்டீரே!

சஞ்சயன்:—பெருமானே வாழ்க நின்புகழ்! நின்கொற்றம் வாழ்க! தமிழகம் வாழ்க! தாங்கள் பத்தினிக்குப் படிவம் சமைக்க இமயத்தில் கல் எடுக்கப் புறப்படுவதாக எம்மன்னர் அறிந்தார். "அதற்காகத் தாங்கள் அந்நெடுந்தொலை வரவேண்டாமே; நாங்களே நற்கல்லெடுத்து, கங்கையில் நீராட்டித் தக்க சிறப்புக்களுடன் அதைத் தங்கள் திருமாளிகையில்கொணர்ந்துசேர்ப்போம்" என்பதைத் தங்கள்பால் அறிவித்து வருமாறு எம் மன்னர் என்னையனுப்பினர்; தாங்கள் நெடுந்தொலை வந்து விடுமுன் இதனை அறிவிக்கவே விரைந்து வந்தேன்.

செங்:—சஞ்சயரே!என் படையெடுப்பின் நோக்கம் இமயத்தில் கல்எடுப்பதும் அதனைக்கங்கையில்நீராட்டுவதும் மட்டுமன்று! பாலகுமாரன் மைந்தர்கள் கனக-விசயரை நீ அறிவாய் அன்றோ? அவர்கள் இருவரும் மன்னர்களின் விருந்தொன்றில் உண்டு களித்திருந்த மயக்கில் போலும், தமிழ்ப் பெருங்குடியினரின் மறப் பண்பை இகழ்ந்தனராம். சேர, சோழ, பாண்டியரின் பெருமையறியாது மூவேந்தரையும் பழித்தனராம். யாம் முன்னர் அங்கு வந்திருந்தபோது புறங்காட்டியோடிய அம்மன்னர்கள் வலுவிழந்திருந்தனராம்: அவர்களிடம் இன்று வீரம் செறிந்துவிட்டதாம். இப்போது தமிழர் வடநாடு வந்தால், தலை தரையைமுத்தமிடச் செய்வராம். இவ்வாறு அவ்விருந்தில் அவர்கள் வீரவுரை பகர்ந்தனராம்.

**சஞ்சயன்**:—இதைத் தங்களிடம் தெரிவித்தவர் எவரோ ?

**செங்**:—வடநாடு சென்று மீண்டவணிகர் இதை எம்மிடம் கூறினர். எனவே, அவ்வடவர்தம் செருக்கை அடக்கிக் கனக விசயர் என்னும் அக்கசடர் தலைமேல் கல்லேற்றி வரவே யாம் புறப்பட்டுள்ளோம். அவர்கள் தமிழகத்தை நேறிற்காணட்டும்.

**சஞ்சயன்** :—அரசர்க்கரசே, சீற்றம் தணிக ! தங்கள் எதிர் நிற்பவர் வடநாட்டில் எவருளர் ! கோளரி முன்னர்க் காட்டில் வாழும் கானுட்டுக் கூட்டம் நிற்றல் உண்டோ ! தங்களை எதிர் நிற்கும் ஆற்றல் அவ்வாட்டு மந்தைக்குண்டோ ! பித்தர்கள் ! மயக்கில் பிதற்றியிருப்பர்! கடந்த போரில் தமிழ்ப் பெருவீரர்கள் காட்டிய வீரத்தை அந்நாடு இதற்குள்ளாகவா மறந்தது ?

**செங்** :—ஆம்; நினைவுறுத்தவே மீண்டும் படையெடுத்துள்ளோம்.

**சஞ்சயன்** :—மன்னர் மன்ன ! எம் நாட்டுப் படை வீரரைத் தங்களுக்குத் துணைப் படையாக அனுப்பி வைத்தற்குறிய ஆயத்தம் செய்ய, அனுமதி அளிக்கின்றீர்களா ?

**செங்** :— நன்றி ; வேண்டா. தமிழர்களுக்குத் துணைப்படை ஏன் ? தமிழர் மறவர்; போருக்கஞ்சாதவர் ; வடநாடு அனைத்தும் ஒன்று திரண்டு வரினும் அச்சம் என்பதைக் கொள்ளாதவர் எனவே, துணைப்படை வேண்டா. ஆயின் எம் படைகள் கங்கையாற்றைக் கடந்து செல்வதற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்துவைக்க

விரும்புகிறேன். கல்கொண்டு மீளுகையில் உம்முடைய நாட்டில் தங்கி இளைப்பாற எண்ணியுள்ளேன். இவற்றிற்கான ஆயத்தங்கள் செய்தலே போதுமானதாகும்:

**சஞ்ச** :—மன்னர் பெருமானே! அங்ஙனமே செய்து வைக்கின்றேன்.

**செங்** :—நீர் போகலாம்!

**சஞ்ச** :—வாழி சேரர் சிறப்பு! வாழி சேரர் பெருமான்!

**செங்** :—வாழிய தமிழ்!

## அங்கம் 4

### காட்சி 1

**இடம்** :—போர்க்களம்.

**காலம்** :—மாலை

**உறுப்பினர்** :—வீரர், துறவு வேடத்தில் சிலர், பெண் வேடத்தில் சிலர், மாறு வேடங்களில் சிலர்.

**ஒருவீரன்** :—என்ன போர் அடா இது! பூனைகள் மீது புலிகள் பாய்வதைப்போல், யானைக் கூட்டத்தில் சிங்கம் நுழைவது போல. அந்த அற்ப வீரர்கள் நம்மைப் போருக்கிழுத்தனரே!

**2-வது வீரன்** :—அற்ப வீரர்களல்லடா! கோழைத்தனத்தை அணிகலனுகப் பூண்ட அற்புத வீரர்கள்!

**3-வது வீரன்** :—புறங்காட்டியோடும் பேடிகள்!

**4-வது வீரன்** :—இந்த அழகுப் போருக்கா இந்த மன்னர்கள் தமிழரைப் பழித்துரைத்தனர். வீரமென்பது மருந்துக்குமில்லா இந்த வீணருக்கு அரசர் என்னும் பெயர் ஏன்? போராம் போர்! பதி

னெட்டு நாழிகையில் இந்தப் போர் முடிந்து விட்டதே!

**5-வது வீரன்:**—எதிர்த்த மன்னாதி மன்னர்கள் போனவிடம் தெரியாமல் ஓடி மறைந்தனரே!

**4-வது வீரன்:**—கனகனையும் விசயனையும் விடாமல் சிறைபிடித்து விட்டோம். அவர்களுக்குத் துணையாக வந்த அரசர்களெல்லாரும் அடிச்சுவடு காணமுடியாமல் ஓடிப்போய் விட்டனர்.

**3-வது. வீ :**—எதிரிகள் அடியோடு தோற்றனர் என்று கூற முடியாது; ஓட்டப் பந்தயத்தில் நாம் தோற்றோமே!

**2-வது வீ :**— புறங்காட்டி ஓடுவதில் நல்ல வீரர்களய்யா இந்த வடவர்கள்.

**1-வது வீ:**—அதில் நல்ல பயிற்சி யளிக்கப் பட்டிருக்கின்றனர்.

**5-வது வீ :**—வாருங்கள் பாசறை செல்வோம்.

**1-வது வீ:**—அதோ எவரோ போகிறார்கள்! யார் அங்கே? நில்! இங்குவா!

(தோற்ற படைவீரர் சிலர் காவியணிந்துவருகின்றனர்.)

**2-வது வீ:**—நீங்கள் யார்? இங்கே என்ன செய்கிறீர்கள்? உண்மையைக் கூறுவிடின் வாளுக்கு விருந்து வைப்பேன்.

**துறவிகளுள் ஒருவன்:**— (நடுங்கிக் கொண்டே) வீரர்களே, நாங்கள் துறவிகள். உலகவாழ்விற்கும், இன்பதுன்பங்களுக்கும், எங்களுக்கும் எத்தகைய உறவுமில்லை. நாங்கள் பல தலங்களைச் சுற்றி இங்கு வந்தோம். போர் நடந்தது கண்டு அஞ்சி

ஒதுங்கினேம். இப்போது எங்கள் தலயாத்திரையைத் துவக்குகிறேம்.

**4-வது வீ** :—போய்த் தொலேயுங்கள்! இரும்படிக்கிற விடத்தில் ஈக்கள்.

(துறவிகள் போகின்றனர்.)

**1-வது வீ** :—அடே! இவர்களைப் பார்த்தால் பரம்பரை ஆண்டிகள் போலில்லேயே. ஒரு வேளைபயந்தோடும் வீரர்களா? வீரம் இவர்களிடம் பஞ்சமாகி விட்டபடியால் துறவிகளாயினரோ?

**2-வது வீ** :—ஆம் அண்ணே! ஒருவன் உடலில் அம்புக் காயம் இருந்ததை நான் பார்த்தேன்.

**3-வது வீ** :—போகட்டும்;நமக்கஞ்சி இவ்வாறு ஆண்டிகளாகி விட்ட இவர்களே விரட்டிச் செல்ல வேண்டாம். போய்ப் பிழைக்கட்டும்.

(தோற்ற வீரர் சிலர் பெண் வேடத்தில் செல்கின்றனர்.)

**1-வது வீ** :—அடே இதோ எவரோ வருகின்றனரே! பெண்களடா! புலம்பிக் கொண்டு வருகின்றனர்.

**2-வது வீ** :—போர்க்களத்தில் பெண்களுக்கு என்ன வேலே?

**3-வது வீ** :—நில்லுங்கள்! இங்கே ஏன் வந்தீர்கள்? நீங்கள் யார்? உண்மையைக் கூறிவிடுங்கள்!

**பெண்கள்** :—ஐயா, நாங்கள் பெண்கள்! இந்தப் போரில் எங்கள் கணவர்கள் மாண்டு விட்டனர் போலும்! போருக்கென மன்னரால் இழுத்து வரப்பட்டவர்கள் மீளவில்லே. அவர்கள் விழுந்து கிடக்கின்றனரா என்று பார்க்க வந்தோம். (புலம்பல் எங்களேப் போக விடுங்கள் ஐயா. எங்கள் கண

வர்கள் உங்களுடன் பொரிடத் தாமாக வரவில்லை. அரசன் எவ்வழி அவ்வழிக் குடிகள் என்பது போலாயிற்று அவர்கள் நிலை! இன்று அரசர்கள் தப்பியோடி விட்டார்கள்; எங்கள் கணவர்கள் கழுகுகளுக்கு விருந்தாயினர் (ஒப்பாரி)

**வீரர்கள்:**—(மனத்துள் இரக்கம் கொண்டு) போய்த் தொலையுங்கள்; இங்கே அழவேண்டாம். போரில் வீரங்காட்டி மாள்வது உங்கள் குடிக்கன்றோ பெருமை!

(பெண் வேடதாரிகள் அழுது கொண்டே போகின்றனர்.)

**1-வது வீரன்:**—அடே இவர்கள் பெண்களா? பூதங்களா? களிறு பிளிறுவதுபோல் இருக்கின்றதே இவர்கள் பேச்சு!

**2-வது வீரன்:**—இந்த நாட்டுப் பெண்கள் இப்படித் தான் இருப்பார்கள் போலும்!

**3-வது வீரன்:**—அடே அடே, அவள் காலைப் பாரடா! அவள் பெண்ணுடா?

**1-வது வீரன்:**—இல்லை யில்லை விடாதே அவர்களை மடக்கு.

**2-வது வீரன்:**—ஓ பெண்களே, எவரேனும் ஓரடி முன் எடுத்து வைத்தால் மண்ணைக் கவ்வுவீர்கள்! இப்படி வாருங்கள்!

**5-வது வீரன்:**—உண்மையைக் கூறுங்கள். நீங்கள் பெண்களா?

**6-வது வீரன்:**—ஆமாமடா, இவர்கள் குணத்திலும் தன்மையிலும் வீரத்திலும் பெண்கள்; ஆனால் பிறப்பால் ஆண்களடா!

**3-வது வீரன்:**—அடே, இவர்கள் நம்மை ஏமாற்றப் பார்த்தார்களடா!

**பெண்கள்:**—வீரர்களே, எங்களுக்கு உயிர்ப் பிச்சை தாருங்கள். நாங்கள் மனைவி மக்கள் எனப் பெருங் குடும்ப முடையவர்கள். மன்னனின் வற்புறுத் தலுக்கிணங்கிப் போரில் ஈடுபட்டோம்; தோற் ரேம். உங்களுக்கு அஞ்சியே இவ்வேடத்தில் ஓடுகின்ரேம். எங்களை ஒன்றும் செய்யாமல் விடு மாறு மன்ருடுகின்ரேம்.

**2-வது வீரன்:**—போகட்டுமடா பேடிகள். ஓடிப்போய் விடுங்கள். ஆணுய்ப் பிறந்த பெண்களே! மீண்டும் எங்கள் முன் தலை காட்டக்கூடாது.

(மற்றும் எவரோ வருகின்றனர்)

**1-வது வீரன்:**— அடே யாரடா அவன்! நில்.

**நொண்டி:**—ஐயா காலில்லாதவன்; நொண்டிங்க. வேலைசெய்து பிழைக்க முடியாதவனுங்க. காசு இருந்தா கொடுங்க ஐயா! வயிறு பசிக்குது.

**குருடன்:**—ஐயா ரெண்டு கண்ணும் தெரியலியே, பாழாப்போன தெய்வம் கண்ணைக் குடுக்கலியே. பசிதீருங்க ஐயா, உங்களுக்கு ஒருவாய் வெற்றிலை; எனக்கு ஒரு வேளை சாப்பாடு ஐயா. ஒரு காசு குடுங்க ஐயா.

**ஊமை:**—சைகைகள் காட்டிக் காசு கேட்கிருன்.

**வாய்க் கோணலுடையவன்:**—வாய்க் கோணல் காட்டிப் பிச்சை கேட்கிருன்.

**உளறுவாயன்:**—பே பே பே பேச மு மு மு மு முடியா தவன் ஐயா. து து து து துட்டிருந்தா கொ கொ

கொ கொ கொடுங்கையா, சி சி சி சி சிறப்புண் டாகும் உ உ உ உங்களுக்கு.

**1-வது வீரன்:**—போர்களத்தில் கூடவா பிச்சைக்காரர் கள்? என்ன கேவலமான நாடு! ஆட்சி முறையின் சீர்கேடு இதிலிருந்து நன்கு விளங்குகிறதே!

**2-வது வீரன்:**—பிச்சைக்காரர்களே! போர்க்களத்தில் பிணம் பிடுங்கித்தின்று பசியாறிக்கொள்ள வந்தீர் களா? செய்வார்களப்பா இந்த மக்கள்! பசி எடுத் தால் பிணங்களைக் கூடப் பிடுங்கித் தின்னும் கழு குக் கூட்டமே இது!

**4-வது வீரன்:**—இல்லையடா, சவங்களாகிக் கிடக்கும் வீரர்கள் ஏதேனும் நகைகள் அணிந்திருந்தால் அவற்றைக் களவாடிக் கொண்டு போக வந்த கூட்டமடா இது.

**1-வது வீரன்:**—இருங்கள்; நான் பார்த்து விடுகிறேன்.

[நொண்டியைத் திருப்பித் திருப்பிப் பார்த்துப் புட்டத்தில் ஓர் உதை கொடுக்க, அவன் நொண்டி வேடம் கலைகிறது.]

அண்ணே, முடம், கூன், குருடு, செவிடு முதலியவற்றைச் சரிபடுத்திவிடும் சக்தி எனக் கிருக்கிறது. இதோபார்; முடவனைச் சரிபடுத்தி விட்டேன்.

[மற்ற வீரர்கள் ஆளுக்கொரு குட்டுக்குட்டி முடவனாயிருந்தவனைத் துன்புறுத்துகின்றனர்.]

**2-வது வீரன்:**—அண்ணே அந்த அம்பை நெருப்பில் காய்ச்சிக் கொண்டுவா. இந்தக் குருடன் கண்ணில் சூடிழுத்தால் இவனுக்குப் பார்வை வந்துவிடும்

**குருடன்:**—ஐயா, வேண்டாமையா நாங்கள் ஏழைப் பிச்சைக்காரர்கள்.

**2-வது வீரன்:**—அட மடையா, நொண்டி சரியாகி விட்டான் பார். உனக்கும் பார்வை வந்துவிடும். பிறகு நீ பிச்சை எடுக்க வேண்டியதில்லையல்லவா?

**3-வது வீரன்:**—(குருடனை உதைக்கிறான்.)

**1-வது வீரன்:**—ஆச்சா அண்ணே! அம்பைத் தீப் போலக் காய்ச்சிக் கொண்டுவா.

**குருடன்:**—ஐயா நான் குருடன் அல்லன், எனக்குச் சூடி ழுக்க வேண்டாம். (கொஞ்சுதல்)

(வீரர்கள் அவனை உதைத்தல்.)

**1-வது வீரன்:**—தோழர்களே, ஊமைக்கும் வரிசைகள் நடக்கட்டும்.

(வீரர்கள் மற்றவர்களை உதைக்கின்றனர். அவர்கள் சரிப்பட்டு விடுகின்றனர்.)

**1-வது வீரன்:**—அடே பார்த்தீர்களா! தமிழர்கள் குருடு, செவிடு, நொண்டிகளை யெல்லாம் சரிப்படுத்தி விடும் சக்தி வாய்ந்தவர்கள். தெரிகிறதா? நீங்கள் உயிர் பிழைத்து ஓடும் வீரர்கள் என்பதை நாங்கள் அறிவோம். ஓடிப்போய்ப் பிழைத்துக் கொள்ளுங்கள்.

(அவர்கள் ஓடுகின்றனர்.)

**வீரர்கள்:**—வாருங்கள்! பாசறைக்குச் செல்வோம்.

## அங்கம் 5

### காட்சி 1

**இடம் :**—நூற்றுவர் கன்னர் மாளிகை.

**காலம் :**—காலை.

**உறுப்பினர் :**—செங்குட்டுவன், வில்லவன்கோதை, படை வீரர்கள், நூற்றுவர் கன்னரின் தலைவர்.

**கன்னர் தலைவர்:**—மன்னர் மன்னரே வாழ்க! வெற்றி வேந்தே வாழ்க! தங்களுக்கு நல்வரவு கூறுகிறோம். நூற்றுவர் கன்னராகிய நாங்கள் என்றும் தங்களுடன் நட்புப் பூண்டவர்கள். இன்றும் தங்கள் அரிய நட்பினை விழைகின்றோம். தங்கள் கொற்றம் வாழ்க!

**செங்குட்டுவன் :**—நண்பரே மகிழ்கின்றோம். நாம் என்றும் நண்பரே. நம் நட்பு என்றும் நிலைத்திருக்கும். (பிறகு படைவீரரைப் பார்த்து) தமிழ் வீரத்தின் தனிப்பெரும் இலக்கியங்களே! தமிழ்ப் பெரும் பண்பை நிலைநாட்டிய கோளரிகளே! உங்களை வாழ்த்துகின்றேன்.

**படைவீரர்:**—தமிழ் வாழ்க, தமிழகம் வாழ்க; சேரர் பெருமான் வாழ்க. (பேரொலி)

**செங்:**—தமிழரின் ஒப்பில்லாத பண்புகளை அறிந்திராத இவ்வட மன்னர்கள், இகழ்ந்துரையாடியதாக நாம் கேள்வியுற்றோம். அத்தகைய நாத்தடிப்பாளர் செருக்கினை அடக்கவேண்டுமென்று உறுதி பூண்டோம். இவர்களை அடக்காவிடின் "கொடுங்கோலன் என்ற இழிநிலைக்குள்ளாவேனாகுக" என்று வஞ்சினங் கூறினோம். எம் வஞ்சினத்தைத் திறம்பட நிறைவேற்றி வைக்க உறுதுணையாக நின்ற உங்கள் அனைவர்க்கும் எம்

வாழ்த்து உரியதாகுக. வீரர்களே, தமிழர்கள் வீண் வேதாந்தங்கள் பேசித் திரிந்துவாழ்நாட்களை வீணுட்களாக்கிவிடும் ஏமாளிகள் அல்லர் என்பதை உங்கள் வீரத்தால் மெய்ப்பித்தீர்கள். நாம் கருதியவாறு இமயத்தில் கல் எடுத்து, தமிழரைப் பழித்த அரசர்கள் தலைமீது அக்கல்லை வைத்துச் சுமக்கச் செய்தீர்கள்; அதனைக் கங்கையிலும் நீராட்டினீர்கள். நாம் எண்ணிவந்த வேலைகள் முற்றுப்பெற்றன. இனி நாம் நம் நாடு செல்வோம். கனக-விசயரைச் சோழ-பாண்டிய நாடுகளுக்கு அழைத்துச் சென்று அவ்வேந்தர்களிடம் மன்னிப்புக் கேட்கச் செய்வோமாக. பின்னர்ப் பத்தினிக்கு விழா எடுப்போம்.

(அமர்கின்றனர்)

**படை** ;—வாழ்க எங்கோ சேரர் பெருமான்! வாழ்க பைந்தமிழ்ப் பண்மொழி.

**வில்லவன்** :—மன்னர் குலவிளக்கே! கன்ன மன்னர்களே! மாண்புடை வீரரே! நாம் இன்று வாகை சூடி, வீடு திரும்புகிறோம். நம்மைப் பழித்தவர்கள் மண்ணைக் கவ்வினர்; கனக-விசயரோ கல் சுமக்கின்றனர். மற்ற மன்னர்கள் அடுக்களையில் ஒளிந்து மனைவியரைக் காவல் வைத்துள்ளனர். எனவே, இந்த வடமன்னரும், அவர்தம் படைகளும் வெறுங் கோழைகள், பெண்களினும் குறைந்த மென்மையுடையவர்கள் என்பதை நேரில் கண்டோம். போரில் உங்கள் திறமையனைத்தும் காட்ட வழியில்லையே என்பது உங்கள் கவலை என்பது எனக்குத் தெரியும். பகைவர் உங்கள் அகன்ற தோள்களைக்

கண்டதும் அஞ்சியோடி விட்டனரே! எதிர்த்து நின்றவர் உங்கள் வாள் வலிக்கு ஆற்ருது புறங் காட்டினரே! எனவே உங்கள் கையரிப்புத் தீரப் போரிட முடியவில்லையே என்பது உங்கள் கவலை. ஒழியட்டும் பேடிகள். நம் மன்னர் பெருமான் நம் அனைவருக்கும் தகுதிக் கேற்பப் பரிசளித்துள்ளார். நம் மன்னர் மன்னனை வாழ்த்துவோம்.

[படைவீரர்கள் 'தமிழ்ப் பெருமான் செங்குட்டுவன் வாழ்க! எனப் பேரொலி எழுப்புகின்றர்.]

நம் படைகள் கங்கையாற்றைக் கடந்து செல்லவும், இமயத்தில் கல் எடுக்கவும், மீண்டும் கங்கையாற்றைக் கடந்து வரவும் உதவி செய்த, நூற்றுவர் கன்னருக்கு நம் வாழ்த்தும் நன்றியறிதலும் உரியனவாகுக. நம்மை விருந்தோம்பிப் பெருஞ் சோறளித்துச் சிறப்பித்தமைக்கு மீண்டும் ஒரு முறை அவர்கட்கு நம் நன்றியை உரிமைப்படுத்துகிறோம். இனி நம் நாடு செல்ல ஆயத்தமாகுங்கள்!

(அனைவரும் கலைகின்றனர்.)

## காட்சி 2

**இடம்** :—பாசறை

**காலம்** .—மாலை.

**உறுப்பினர்** :—செங்குட்டுவன், வில்லவன்கோதை, வீரர்கள், கனக-விசயர்.

**வீரர்கள்** :—வாழ்க சேரர் பெருமான்!

**செங்** :—எங்கே அந்தக் கோழைகள்!

**வில்லவன்** :—(இரு வீரர்களை விளித்து) அவ்விருவரையும் அரசர் பெருமான் முன் கொணர்ந்து நிறுத்துக.

(கனக விசயர் கைகள் புறத்தில் பிணிக்கப் பட்டவராய் செங்குட்டுவன்முன் கொணர்ந்து நிறுத்தப்படுகின்றனர்.)

**வில்லவன் :**—(கோபக்கனல் வீசப் பற்களை நறுநறு வெனக் கடித்துக்கொண்டு) கனக விசயராம் கனக விசயர்———தமிழரைப் பழித்த ஆரியப் புலிகள்.........எங்குப் போய் ஒளிந்தது உங்கள் ஆண்மை! எங்கொளிந்தது உங்கள் வீரம்? "யாகா வாராயினும் நாகாக்க, காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" என்னும் பொய்யா மொழியை நீங்கள் அறியீர் போலும்! வயிறு புடைக்கத் தின்று வீணுரை பேசிப் புல்லிய வாழ்வு நடத்தித் திரியும் உங்களுக்கு இவை எங் ஙனம் தெரியும்?

**செங்:**—பொய் மொழிகளைக் கேட்டுப் பொய் மொழி களைப் பேசிப் பொய் வாழ்வு நடத்தும் பொய்யர் களாகிய நீங்கள் புல்லுரைகளைப் புகன்றதனுல், நாம் போர்க்கோலம் கொண்டோம். உங்கள் இழி தகைமையால், இதில் தொடர்பற்ற உங்கள் நாட் டவர் பலரை மடியவைக்க வேண்டியதாயிற்று. குற்றமற்ற உங்கள் வீரர் பலரின் அழிவுக்குப் பொறுப்பாயுள்ள உங்களை இப்போது நான் என்ன செய்யட்டும்? .........உங்களைக் கசக் கிப் பிழிந்து அழித்து நிலச்சுமையைக் குறைக்க என்னுல் இயலும்! பழிக்குப் பழி வாங்குவது தமிழர் பண்பன்று. 'இன்னு செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயஞ் செய்துவிடல்' என்பது தமிழர்தம் தனிமறைக் கூற்று. ஆயின், 'மானம் அழிந்த பின் உயிர் வாழாமை முன்னினிதே' என் பதை உளத்தமைத்தவர் தமிழர். எனவே, தங்கள்